




ஸ்ரீ சற்குரு - மகா - கோவிந்த சுவாமிகள்

அவர்களைக் குறித்த

# ஸ்ரீ குரு ஸ்துதியும் - வேதாந்த அர்த்தமும்

## கீர்த்தனைகள்

மூலமும் - உரையும்



முற்பகுதி

மூலம் இயற்றியவர்:
பிரம்ம ஞானச் செல்வி
ஸ்ரீ இராம ருக்மணி யம்மையார்
ஸ்ரீ இராமாஸ்ரமம்
கொப்பமாபுரி - திருச்சி மாவட்டம்

உரையியற்றி வெளியிடு செய்தவர்:
சிருங்ககிரி ஸ்ரீ சாரதாபீடம் ஆஸ்தான வித்துவான்
புலவர் மணி, தமிழிசை மணி, சாஹித்திய கலாநிதி
ஸ்ரீ C. N. ஆதிசேஷ ஐயர்
ஆனையாம்பட்டி - சேலம் மாவட்டம்

வெளியீடு:
ஸ்ரீ இராமாஸ்ரமம்
கொப்பமாபுரி — திருச்சி மாவட்டம்

1 — 5 — 1975



ஸ்ரீ சற்குரு - மகா - கோவிந்த சுவாமிகள்

அவர்களைக் குறித்த

# ஸ்ரீ குரு ஸ்துதியும் - வேதாந்த அர்த்தமும்

## கீர்த்தனைகள்

மூலமும் - உரையும்

முற்பகுதி



மூலம் இயற்றியவர் :
பிரம்ம ஞானச் செல்வி
**ஸ்ரீ இராம ருக்மணி யம்மையார்**
ஸ்ரீ இராமாஸ்ரமம்
கொப்பமாபுரி - திருச்சி மாவட்டம்

உரையியற்றி வெளியீடு செய்தவர் :
சிருங்ககிரி ஸ்ரீ சாரதாபீடம் ஆஸ்தான வித்துவான்
புலவர் மணி, தமிழிசை மணி, சாஹித்திய கலா நிதி
**ஸ்ரீ C. N. ஆதிசேஷ ஐயர்**
ஆனையாம்பட்டி – சேலம் மாவட்டம்

வெளியீடு :
**ஸ்ரீ இராமாஸ்ரமம்**
கொப்பமாபுரி – திருச்சி மாவட்டம்
பதிப்பு உரிமையுடையது
1 — 5 — 1975

ஸ்ரீ இராமாஸ்ரம வெளியீடு : 2
முதற்பதிப்பு : 1 – 5 – 1975
ஸ்ரீ இராமாஸ்ரமம்
கொப்பமாபுரி
துறையூர் வட்டம்
திருச்சி மாவட்டம்.
PIN—621 012.

ஜோதி பிரிண்டர்ஸ், திருச்சி – 2. போன் : 5416.

9—1

# முகவுரை

(திருக்குறள் — கடவுள் வாழ்த்து)

"கற்றதனுல் ஆய பயனென்கொல் வாலறிவன்
நற்ருள் தொழாஅர் எனின்."

(இதன் பொருள்) மெய்யுணர்வினை யுடையவனுகிய கடவுளின் நல்ல தாள்களைத் தொழாராயின், எல்லா நூல்களையும் கற்றவர்க்கு அக்கல்வியறிவால் ஆய பயன் யாது? (பயன் இல்லை - என்றவாறு).

**கருத்து :** கற்ற நூல் அறிவுக்குப் பயன், இறைவனது தாளைத் தொழுது அவனது அருளைப் பெற்றுப் பிறப்பு இறப்பு முதலிய துன்பங்களை நீக்கிக்கொள்ளுதலாகிய பேரின்ப வீடு உறுதலாம்.

(திருக்குறள் - மெய்யுணர்தல் = சச்சிதானந்த தத்துவ ஞானம்)

"கற்றுஈண்டு மெய்ப்பொருள் கண்டார் தலைப்படுவர்
மற்றுஈண்டு வாரா நெறி."

(இதன் பொருள்) இம்மக்கட் பிறப்பின் கண்ணே உபதேச மொழிகளை அனுபவம்உடைய தேசிகர்பால் (சற்குருவினிடம்) கேட்டு, அதனுல் மெய்ப்பொருளை (சச்சிதானந்த ஆத்மப் பிரம்மப் பொருளை) உணர்ந்தவர், மீண்டு இப்பிறப்பின்கண் வாராத நெறியை எய் துவர் (என்றவாறு).

ஈண்டு வாராநெறி = பேரின்ப வீட்டுநெறி.

இவ்வாறு தெய்வப் புலமைத் திருவள்ளுவ நாயனுர் தமிழ் மறை யாகிய திருக்குறளில் கூறியுள்ளனர். இவ்வாறு திருக்குறள் கூறும் பொருளையே, வினையின் நீங்கி விளங்கிய அறிவின் முனைவனுகிய இறைவன் அருளிய நான்மறை முடிவும், அவனது அருள் வழிப்பட்ட ஆன்ருேர்கள் அருளிச் செய்த தேவாரங்கள், வேதாந்தப் பிரம்ம சூத்திரம், கோவை, திருவாசகம், திருமந்திரம் முதலிய நூல்களும் கூறுகின்றன; என்று தெய்வீக அறிவிற் சிறந்த ஔவையார் நல்வழி என்னும் நூலில் கூறியிருக்கின்றனர்; அது வருமாறு.

"தேவர் குறளும் திருநான் மறைமுடிவும்
மூவர் தமிழும் முனிமொழியும் - கோவை
திருவா சகமும் திருமூலர் சொல்லும்
ஒருவா சகம்என்(று) உணர்."

(இதன் பொருள்) திருவள்ளுவதேவர் அருளிய திருக்குறளும், இறைவன் அருளிய சிறந்த நான்கு வேதங்களின் முடிவாகிய (வேதாந்தமாகிய) உபநிடதங்களும், திருஞானசம்பந்தமூர்த்தி நாயனுர், திருநாவுக்கரசு நாயனுர், சுந்தரமூர்த்தி நாயனுர் ஆகிய மூவர் அருளிய தேவாரங்களும், வியாச முனிவர் அருளிய வேதாந்தப் பிரம்ம சூத்திரமும், திருவாதவூரடிகளாகிய மாணிக்கவாசகர் அருளிய திருக்கோவையார், திருவாசகம் ஆகியவைகளும், திருமூல நாயனுர் அருளிய திருமந்திரமும் ஒருபொருளேயே குறித்த வாக்கியங்கள் என்று நீ அறிவாயாக. (என்றவாறு)

கருத்து : திருக்குறள் முதலிய நூல்களெல்லாம், வேறு, வேறு வாக்கியங்களாகத் தோற்றினும், சீவ, ஈசுர, ஜகத்து ஆகியவைகளின் இலக்கணங்களும், பந்தம் (அகங்காரக் கிரந்தியாகிய முடிச்சு), முக்தி (அகங்காரக் கிரந்தியாகிய முடிச்சின் விடுதலேயாகிய பேரின்ப வீடு) ஆகியவைகளின் இலக்கணங்களும் ஒரு தன்மையாகவே அறிவிக்கும் நூல்களாம். (என்றவாறு)

உபநிடதம் எனினும், வேதாந்தம் எனினும், வேதசிரசு எனினும், பிரபல சுருதி எனினும் பொருந்தும்.

வேதாந்த சூத்திரம் எனினும், பிரம்ம மீமாஞ்சை எனினும், உத்தர மீமாஞ்சை எனினும் பொருந்தும். (மீமாஞ்சை = விசாரம்)

இவ்வாறு இறைவனும், அவனருள் வழிப்பட்ட ஆன்ரேரும் அருளிய நூல்கள் கூறுகின்ற வீட்டுநெறியை, அந்நூல்கள் கூறுகின்ற முறையின்படி சற்குருவின் வாயிலாகக் கேட்டு உணர்தலே சிறப்புடையதாகும் என உணர்ந்த, கொப்பமாபுரி பிரம்மஞானச் செல்வி, ஸ்ரீ இராமருக்மணியம்மையார் அவர்கள், சற்குருவாகிய ஸ்ரீ மகா – கோவிந்த சுவாமிகள் அவர்களிடம் திருக்குறள், வேத உபநிடதங்கள், வேதாந்தப் பிரம்ம சூத்திரம், பகவத்கீதை, விவேக சூடாமணி, பஞ்சதசி, ஜீவன்முக்தி விவேகம், வேதாந்த சூடாமணி, கைவல்லிய நவநீதம், ஞானவாசிட்டம், ரிபு கீதை, சிவஞானபோதம் சமஸ்கிருத சுலோகங்களுக்கு சிக்கத்தம்பூர் ஸ்ரீ வி. பிரம்மானந்த சுவாமிகள் இயற்றிய தமிழுரை, தேவாரம், திருவாசகம், திருமந்திரம் முதலிய நூல்களே முறைப்படி ஐயந்திரிபு அறக்கேட்டுத் தெளிந்து, மெய்யுணர்தலாகிய சச்சிதானந்த ஆத்மப் பிரம்மஞான அனுபவ பூர்வகமான பேரின்ப வீட்டுநிலேயாகிய ஜீவன் முக்தி நிலேயை யடைந்து, தமது அனுபவத்தையும், குரு உபதேசத்தையும் குறிப்பிடுதலுடன் கூடிய குரு ஸ்துதிகளாகிய இரண்டு கீர்த்தனேகளே இயற்றினர். இவ்விரண்டு கீர்த்தனேகளேயும், அவர்களது வரலாறு முதலியவைகளேயும், இதற்குமுன் 5 – 1 – 1974 ஆம் தேதியில் வெளியிடு செய்த ஸ்ரீ இராமாஸ்ரம வரலாறு என்னும் நூலில் வெளியிடு செய்திருக்கிறேன்.

இத்தகைய சிறப்புக்கள் வாய்ந்த குரு ஸ்துதிகளாகிய கீர்த்தனைகளைக் கண்ட அன்பர்கள் பலரும் இக்கீர்த்தனைகளை உரைகளுடனும், இசை யமைப்புக்களுடனும் வெளியீடு செய்யவேண்டும் என்னும் தமது விருப்பத்தைத் தெரிவித்தனர். ஆகவே இவ்விரண்டு கீர்த்தனைகளையும், இக் கீர்த்தனைகட்கு யான் இயற்றிய உரைகளுடன் இந்நூலின் முற்பகுதியிலும், திருச்சி வானொலி நிலையம் ஸ்ரீ S. V. பார்த்தசாரதி ஐயங்கார் அவர்கள் இக்கீர்த்தனைகட்கு அமைத்த இசைக் குறிப்புகளுடன் இந்நூலின் பிற்பகுதியிலும் அமைத்து, இந்நூலை வெளியீடு செய்கின்றேன். இவ் வெளியீடானது அன்பர்களின் மனதிற்கு மகிழ்வூட்டுமென நம்புகின்றேன்.

இங்ஙனம்,

**C. N. ஆதிசேஷ ஐயர்**

ஆனையாம்பட்டி – ஆத்தூர் வட்டம்,
சேலம் மாவட்டம்.
1 – 5 – 1975.

---

## அறிவுநூல் கற்கவேண்டும் என்னும் அறிவுரை

**நாலடியார் — கல்வி**

*[அறிவுநூல் கல்லாமையால் பயனின்மை கூறல்]*

அலகுசால் கற்பின் அறிவுநூல் கல்லா(து)
உலகநூல் ஓதுவது எல்லாம் — கலகல
கூஉம் துணையல்லால் கொண்டு தடுமாற்றம்
போஒம் துணை யறிவார் இல்.

(இதன் பதவுரை) அலகுசால் = (மொழித் திறத்தின் முட்டறுத்தலுக்குத் தக்க) அளவு அமைந்த, கற்பின் = கல்வியறிவால், அறிவுநூல் = ஞான நூல்களை, கல்லாது = கற்க விரும்பாமல, உலகநூல் = உலகத்துக்கு உரிய நூல்களை, ஓதுவது எல்லாம் = கற்பது முழுமையும், கலகல = கலகல என, கூம் = இரைகின்ற, துணை அல்லால் = அளவுடையதல்லாமல், கொண்டு = (அந்நூலறிவைப்) பெற்று, தடுமாற்றம் = (பிறவியினது) நிலை மாறுதலினின்றும், போம் = நீங்குகின்ற, துணை = துணைசெய்வதை, அறிவார் இல் = அறிபவர் இலர்.

(பொழிப்புரை) மொழித்திறத்தின் முட்டறுத்தலுக்குத் தக்க அளவு அமைந்த கல்வியறிவால் ஞான நூல்களைக் கற்க விரும்பாமல், உலகத்துக்குரிய நூல்களைக் கற்பது முழுமையும் கலகலவென இரைகின்ற அளவுடையதல்லாமல், அந்நூலறிவைப் பெற்றுப் பிறவியினது நிலைமாறுதலினின்றும் நீங்குகின்ற துணை செய்வதை அறிபவர் இலர் (பலர் இலர்).

(கருத்துரை) அறிவுநூல் பலருங் கற்றுப் பிறவி முதலிய துன்பங்களை நீக்கிக்கொள்ள வேண்டும் என்பதாம்.

கற்பு காரணவாகுபெயர். அறிவுநூ லொழிந்த நூல்கள் உலகிற் புகழ் பொருளீட்டுதற்கே பயன்படுமாதலால் அவற்றை ஓதுவதைக் "கூஉம்துணை" என்றும், அறிவுநூல் கல்லார் பலராதல் நோக்கித் "துணை யறிவாரில்" என்றும் கூறினர். துணையாயுள்ள தென்றது துறவறத்தை. (யான் எனது என்னும் செருக்கு அறுத்தலை.) கலகல ஒலிக்குறிப் புணர்த்தும் உரிச்சொல்லாகிய இரட்டைக் கிளவி.

பிரம்ம ஞானச் செல்வி

## ஸ்ரீ இராம ருக்மணி யம்மையார் அவர்களின்

சமாதி யாலயம் அமைந்துள்ள ஸ்ரீ இராமாஸ்ரமத்தின் முன்புறம் பதிக்கப் பெற்ற இரண்டு கல்வெட்டுகளில் குறிப்பிட்டுள்ள

**ஸ்ரீ இராம ருக்மணி யம்மையார் அவர்களின்**

## ஐக்கிய நாட் குறிப்புகள் வருமாறு :

## 1 ஆம் கல்வெட்டு - வசனம்

உ

ஓம் தத்ஸத்

ஸ்ரீ இராமாய நம:

திருச்சி மாவட்டம்

கொப்பமாபுரி — ஸ்ரீ இராமாஸ்ரமம்

ஸ்ரீ பிரம்ம ஞானச் செல்வி

**ஸ்ரீ இராம ருக்மணி அம்மையார் அவர்கள்**

ஸ்ரீ இராமச் சந்திர பகவானின் சொரூபத்தில் ஐக்கியம் அடைந்திருக்கின்ற நாள்.

கலியுகாதி வருஷம் 5074 க்குச் சரியான சாலிவாகன வருஷம் 1895. ஆங்கிலம் 1974 ஆம் வருஷம், பிப்ரவரி மாதம், 24 ஆம் தேதி. தமிழ் பிரமாதீச வருஷம், உத்திராயணம், மாசி மாதம், 12 ஆம் தேதி, ஞாயிற்றுக்கிழமை சூரிய உதயாதி நாழிகை 35 க்குச் சரியான முன் இரவு மணி 8 நிமிஷம் 30, பூர்வ பக்ஷம், திருதியை திதி, உத்திரட்டாதி நக்ஷத்திரம், சாத்திய நாம யோகம், கரசை கரணம், கன்னியா லக்னம், அமிர்த யோகம் ஆகிய சுபநாளில் கொப்பமாபுரி ஸ்ரீ பிரம்ம ஞானச் செல்வி, ஸ்ரீ இராம ருக்மணி அம்மையார் ஸ்ரீ இராமச் சந்திர பகவானின் சொரூபம் ஆகிய சச்சிதானந்தப் பிரம்ம சொரூபத்தில் ஐக்கியம் அடைநதிருக்கின்றார்கள்.

**(சமாதி அமைப்பு விதி விபரம்)**

அவர்களது திருமேனி, ஸ்ரீ இராமாஸ்ரமம் கர்ப்ப கிரகத்தில், யஜுர் வேதத்தின் ஜாபாலாதிக ஏகாதச உபநிடதம் கூறுகின்ற விதிப்படி சமாதி செய்யப் பெற்று, அதன் மேல் சோடசதள பத்ம (பதினாறு இதழ் தாமரை)ப் பீடத்தில் ஸ்ரீ மகா விஷ்ணுவின் அருவுருவத் திருமேனி யாகிய ஸ்ரீ சாளக் கிராமம் அமைக்கப் பெற்று, பூசனைகள் புரியப் பெற்று வருகின்றன.

**தோற்றம் :—**

ஆங்கிலம் – 1913 ஆம் வருஷம், நவம்பர் மாதம், 15 ஆம் தேதி. தமிழ் – பிரமாதீச வருஷம், கார்த்திகை மாதம், 1 ஆம் தேதி, ஞாயிறு.

**ஐக்கியம் :—**

ஆங்கிலம் – 1974 ஆம் வருஷம், பிப்ரவரி மாதம், 24 ஆம் தேதி. தமிழ் – பிரமாதீச வருஷம், மாசி மாதம், 12 ஆம் தேதி, ஞாயிறு.

## 2 ஆம் கல்வெட்டு - கவி

உ

ஓம் தத் ஸத்

ஸ்ரீ இராமாய நம :

திருச்சி மாவட்டம்

கொப்பமாபுரி – ஸ்ரீ இராமாஸ்ரமம்

ஸ்ரீ பிரம்ம ஞானச் செல்வி

**ஸ்ரீ இராம ருக்மணி அம்மையார் அவர்கள்**

ஸ்ரீ இராமச் சந்திர பகவானின் சொரூபத்தில்

ஐக்கியம் அடைந்திருக்கின்ற நாள்.

**இருபத்தெண்சீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்**

| | | | |
|---|---|---|---|
| பேர் கொண்ட | கலிவருடம் | ஐயாயி | ரத்தோடு |
| பேணுமெழு | பத்து | நான்கில் | |
| பெறுசாலி | வாகனம | தாயிரத் | தெண்ணூறில் |
| பெருகுதொண் | ணூற்ரெு | டைந்தில் | |
| பிறங்குமாங் | கிலமாயி | ரத்துத்தொ | ளாயிரம் |
| பெற்றவெழு | பத்து | நான்கில் | |
| பிப்ரவரி | இருபான் நாற் | றேதிபிர | மாதீச |
| பேசுதமிழ் | ஆண்டு | தன்னில் | |
| பார்கொண்ட | உத்திரா | யணமாசி | பனிரெண்டு |
| பகர்தேதி | ஆதி | வாரம் | |
| பானுவுத | யாதிநா | ழிகைமுப்ப | தைந்தினில் |
| பாங்குமிகு | பூர்வ | பட்சம் | |
| பரவுமிகு | திருதியை | உத்திரட் | டாதியாய்ப் |
| பன்னுநட் | சத்தி | ரத்தே | |
| பயிலுசாத் | தியநாம | யோகமதில் | ஆர்ந்திடும் |
| பரமகர | ணங்க | ரசையாய் | |
| நேர்கொண்ட | கன்னியா | லக்கினமொ | டமிர்தமாம் |
| நிதயோக | சுபதி | னத்தில் | |
| நித்தமிகு | பதியான | சத்தரிஷி | ஈசனூர் |
| நீதியரு | ளோட | மர்ந்த | |
| நீதமிகு | தலமான | கொப்பமா | புரியதனில் |
| நீடுஸ்ரீ | இராம | பக்தி | |
| நிலைத்தபிர | மானந்த | நிட்டைதனி | லேநின்று |
| நிகரிலா | அருளில் | வாழ்ந்த | |
| தார்கொண்ட | ஸ்ரீபிரம | ஞானமார் | செல்வியெனும் |
| தருமமிகு | நாமம் | உற்ற | |
| தவதேவி | ஸ்ரீஇராம | ருக்குமணி | அம்மையார் |
| சத்தியஸ்ரீ | இராமர் | உருவாம் | |
| சச்சிதா | னந்தபிர | மத்தினுடன் | ஐக்கியமாய்ச் |
| சரணரா | மாஸ்ர | மத்தே | |
| சமாதியா | லயமேற்று | சாரருள் | புரிந்திடும் |
| தகுதெய்வ | மாகி | யுளரே. | |

பொருளடக்கம் பக்கம்



ஸ்ரீ இராமாஸ்ரமம் கர்ப்ப கிரகத்தில் உள்ள

**ஸ்ரீ இராமச்சந்திர பகவானின் சித்திரத் தோற்றமும்**

பிரம்ம ஞானச் செல்வி ஸ்ரீ இராம ருக்மணி யம்மையாரின்
சமாதியின்மீது அமைத்த சோடசதள பத்மபீடத்தில் உள்ள
சாளக் கிராமத்தின் தோற்றமும்



ஸ்ரீ இராம ருக்மணி அம்மையார் பாடம் படித்தல்

உ

# ஸ்ரீ குரு ஸ்துதியும் - வேதாந்த அர்த்தமும்

## மங்கலம்

### கொப்பமாபுரி – ஸ்ரீ பஞ்சமூர்த்திகள் துதி

சீர்மிகுந் திலங்கும் கொப்பமா புரியார்
திருத்தல நடவிநா யகனைத்
தார்மிகுஞ் சண்மு கேசனைப் பதியாம்
சத்தரி ஷீசுர இறையைப்
பேர்மிகுங் குங்கு மாம்பிகை யனையைப்
பேணுசின் முத்திரை காட்டும்
தேர்மிகும் ஆதி பரமசற் குருவாம்
தெக்ஷிணு மூர்த்தியைப் பணிவாம்.

### ஸ்ரீ இராமச்சந்திர பகவான் துதி

திருமிகும் அயோத்தி தோன்றிநல் வசிட்டர்
திருமொழி ஏற்றுமா சீதை
திருமணம் ஆர்ந்து வனமுற அனுமார்
சேர்வுற அரக்கரை மாய்த்துத்
தருமரைப் புரந்து மருவும யோத்தி
தகுமகு டாபிஷே கமுறக்
குருவுமாய்க் கரச்சின் முத்திரை காட்டிக்
குலவுமி ராமர்தாள் போற்றி.

### ஸ்ரீ கிருஷ்ண பகவான் துதி

சீர்மிகும் ஞானம் ஆர்ந்த செங்கரக் கமலங் காட்டிப்
பேர்மிகும் பரசீ வைக்யம் பேசியப் பரத்தைக் கண்டால்
போர்மிகும் மோக சோகம் போமெனப் பார்த்தற் கோதும்
கார்மிகும் ஆழிக் கையன் கண்ணனின் பாதம் போற்றி.

### ஸ்ரீ குரு துதி

இருவிழிகள் உலகறிந்தும் தனையறியா ததுபோல்
இயானறியும் பொருளலதிங் கெனையறியா மையினுல்
கருவிடைபுக் கின்பதுன்பக் கடலிடையே சுழன்று
கண்கலக்கப் படுவேனைக் கருணைவிழி யதனுல்
அருவினைகள் அறநோக்கி ஆணவமே போக்கி
அகமகமென் றிருந்தவெலாம் அறிவுகொடே நீக்கிப்
பருவமதிற் பதந்தாக்கிக் கற்பனைகள் இயாவும்
பாழாக்கித் தானுக்கும் பரகுருவைப் பணிவாம்.

---



# ஸ்ரீ ஜகத்குரு சங்கராசாரியர்

## ஸ்ரீ சங்கர குருவின்மீது புஜங்க ஸ்தோத்ரம்

[ முனிவர் சுவாமிகள் இயற்றிய மூலமும்,
தஞ்சை ஸ்ரீ வி பிரம்மானந்த சுவாமிகள் இயற்றிய உரையும் ]

சுலோகம்

1. அஹம் தேகபுத்த்யா தவைவாஸ்மி தாஸோஹ்யஹம்
ஜீவபுத்த்யா அஸ்மி தேம்சைகதேச : |

த்வமேவாஸ்ம்யஹம் த்வாத்மபுத்த்யா தத்தாபி
ப்ரஸிதாந்வஹம் தேஹபுத்த்யா நமஸ்தே ||

(இதன் பொருள்) ஸ்ரீ ஜகத்குருவே! யான் தேக புத்தியினுல் தமது தாஸனுயிருக்கின்றேன். ஜீவபுத்தியால் தமது அம்சத்தின் ஏகதேசனுயிருக்கின்றேன். ஆத்மபுத்தியினுல் நீரேயான். அங்ஙன மாயினும் தேகபுத்தியினுல் தினந்தோறும் யான் உம்மை நமஸ்கரிக்கின்றேன். சந்தோஷித்து அருள்புரிவீராக.

சுலோகம்

2. இதம் நேதிநேதித்யமூர்த்தம் ச மூர்த்தம்
நிரஸ்யைவ ஸர்வம் ஜகத்த்ருச்யமேதத் |

நிஷேதாவதி ப்ரஹ்ம யச்ச்சிஷ்யதே வை
மநோவாக்கதீதாய தஸ்மை நமஸ்தே ||

(இதன் பொருள்) இந்தச் சகலதிருசிய (அறிபடும்) ஜகத்தையும் இங்ஙனமன்று இங்ஙனமன்று என அமூர்த்தத்தையும் (அறிபடாப் பொருளாகிய காரணமாயையையும்), மூர்த்தத்தையும் (அறிபடும் பொருளாகிய காரிய ஜகத்தையும்) ஒழித்து, அங்ஙனம் நீக்கிய எல்லேயில் மிஞ்சுவது எந்தப்ரஹ்மமோ, அந்த மனேவாக்குக்கு எட்டாத பிரஹ்மமாகிய உமக்கு நமஸ்காரம்,

---

நூல்

# ஸ்ரீ குரு ஸ்துதியும் - வேதாந்த அர்த்தமும்

## ஸ்ரீ இராம ருக்மணி அம்மையார் இயற்றியது

**முதலாவது கீர்த்தனை**

ராகம் : காம்போதி — தாளம் : ஆதி

**பல்லவி**

வந்தார் அருள்செய வந்தார்
எந்தைசற் குருநாதர் சந்ததம் துணைபுரிய (வந்தார்)

**அனுபல்லவி**

கொந்தார் அணியும் நங்கள் கோதண்ட ராமனே வந்து
கோவிந்த ஸ்வாமி என்னும் நாமம் தரித்துக்கொண்டு (வந்தார்)

**சரணம் – 1**

பவக்கடல் தாண்டி நாம் பரமன் அருட்கடலில்
பரிந்து மூழ்கித் திளைக்கும்படி செய்தார்
பாரினில் அதுநீ நீஅது என்னும்
பரமதத் துவமதை உபதேசம் புரிந்தார்
புவியினில் சர்வமுமாய் பொலிவது அதுவே
பூரண மானதது புரிந்துகொள் வாய் என
போதித் தருளி ஈசன் பாதத் துணை அடையும்
புண்ணியப் பயிற்சி தினம் பண்ணியே பயன்பெறவே (வந்தார்)

**சரணம் – 2**

"அஸம்ஸயம் மஹாபாஹோ மனோ துர்நிக்ரஹம் சலம்
அப்ப்யாஸேனது கௌந்தேய வைராக்யேணச க்ருஹ்யதே"
அதனை உணர்வாய் என்றே அருள் உபதேசம் செய்தார்
அர்ஜுனற்குக் கீதை அருளிய கண்ணன் போலே
மனோநாசம் வாசனா க்ஷயம் செய்து
வையகத்தில் ஜீவன்முக்தி எய்திடுவாய் நீ என்று
கிருபை ஆசி அளித்த அருமை பெருமை யான
கீதகோ விந்தபூஜ்ய பாதசற் குருவாக (வந்தார்)

---

(இதன் பதவுரை)

பல்லவி

[முன்னுரை : எறும்பூர், ஸ்ரீ தத்துவராய சுவாமிகள் அருளிய பாடுதுறை. குணலே. ஸ்ரீ தத்துவராய சுவாமிகள் தமது குருவாகிய சொரூபானந்த சுவாமிகளின் வருகை முதலியவற்றின் சிறப்பைக் குறித்துப் பாடியது.

மறைசொ லும்பொருள் மனித வேடமாய்
வந்த(து) என்றிடு குணலே
மாலும் மாலுறும் பதம்என் சென்னியில்
வைத்த(து) என்றிடு குணலே

அறைகட ற்றிரை மனம்(இ) மைப்பிலே
அழிந்த(து) என்றிடு குணலே
அறிவு(உ) ருவமாய் அலது கண்டிட
அரிதாய்த்(து) என்றிடு குணலே.

(இதன் பொருள்) திருமறை கூறுகின்ற சச்சிதானந்தப் பிரம்ம மாகிய மெய்ப்பொருள் மனித உருவமாய் வந்தது என்று கூறுவாய் : வலிமை மிகுதியால் செய்யும் பேரொலியே. மயக்கமாகிய அஞ் ஞானமும், மயக்கமுற்று ஒழியும் திருவடியை எனது சிரத்தில் வைத்தது என்று கூறுவாய் : வலிமை மிகுதியால் செய்யும் பேரொலியே. ஒலிக்கும் கடலின் அலேபோல அலேயும் மனமானது, இமைக்கும் நேரத்திலே அழிந்து விட்டது என்று கூறுவாய் : வலிமை மிகுதியால் செய்யும் பேரொலியே. அறிவுவடிவமாய் உள்ள சச்சிதா னந்தப் பிரம்மம் அல்லாததான, மாயா கற்பித நாமரூபங்கள் காண்பதற்கு அரியதாயிற்று (அதாவது இல்லாத தாயிற்று : ஆகவே அறிவு வடிவமாய் உள்ள சச்சிதானந்தப் பிரம்மமே காண்பதற்கு உரியதாய் உள்ளதாயிற்று) என்று கூறுவாய்: வலிமை மிகுதியால் செய்யும் பேரொலியே. (என்றவாறு)

குணலே = வீராவேசத்தால் கொக்கரித்தல், அதாவது வலிமை மிகுதியால் பேரொலி செய்தல்.

இவ்வாறு ஸ்ரீ தத்துவராய சுவாமிகள் தமது குருவாகிய சொரூபானந்த சுவாமிகளின் வருகை முதலியவற்றின் சிறப்பைக் குறித்துப் பாடிய முறையிலும், இதுபோன்றே பல ஆன்றோர்கள் பாடிய முறையிலும் "வந்தார் அருள்செய வந்தார்" என்னும் தலேப்பையுடைய துதிவடிவ கீர்த்தனேயைக் கூறுகின்றூர்.]

எந்தை = எமது சுவாமியான — சற்குருநாதர் = சத்தாகிய பரமாத்ம ஞானத்தை உபதேசிக்கும் சதாசாரமுடைய ஞான குருநாதர் — வந்தார் = வருகை தந்தார் — அருள்செய = கிருபை செய்ய — வந்தார் = வருகை தந்தார் — சந்ததம் = சதாகாலமும் — துணேபுரிய = ஞான உதவி செய்ய — வந்தார் = வருகை தந்தார்,

அனுபல்லவி

கொந்து ஆர் அணியும் = (பக்தர்களால் அலங்காரம் செய்யப் படும்) பூங்கொத்துக்களை அழகுறப் பூணும் திருமேனியையுடைய — நங்கள் = நமது (இறைவனை) — கோதண்டராமனே = கோதண்ட மென்னும் தனுசைத் தாங்கிய ஸ்ரீ இராமபிரானே — வந்து = (அருவ நிலையிலிருந்து உருவநிலைக்கு) வந்து — கோவிந்த ஸ்வாமி என் னும் = ஸ்ரீ குரு கோவிந்த சுவாமி என்கிற — நாமம் தரித்துக் கொண்டு = திருப் பெயர் தாங்கிக்கொண்டு — வந்தார் = வருகை தந்தார்.

சரணம் - 1

நாம் = (மோக்ஷ இச்சையையுடைய முமுக்ஷுக்களாகிய) நாம் — பவக்கடல் தாண்டி = பிறப்பு இறப்பு ஆகிய சுழற்சி வடிவ சமுசாரத் துன்ப சமுத்திரத்தைக் கடந்து — பரமன் அருட் கடலில் = பரமான்மா வின் கிருபையாலான மோக்ஷப் பேரின்ப சமுத்திரத்தில் — பரிந்து மூழ்கி = அன்புடன் அமிழ்ந்து — திளைக்கும்படி செய்தார் = மோக்ஷப் பேரின்பம் அனுபவிக்கும்படி செய்தார்.

பாரினில் = உலகில் — அது நீ = (சாம வேதத்தின் சாந்தோக்கிய உபநிடதத்திலுள்ள, "தத்துவம் அசி = அதுநீயாக இருக்கிருய்" என்னும் உபதேச மகாவாக்கியமானது) அது என்னும் சச்சிதானந் தப் பிரம்மம், நீ என்னும் சச்சிதானந்த ஆன்மாவாம் – நீ அது = நீ என்னும் சச்சிதானந்த ஆன்மா அது என்னும் சச்சிதானந்தப் பிரம்மமாம் — என்னும் = என்று கூறுகின்ற — பரம தத்துவம் அதை = மேலான ஆத்மப் பிரம்ம ஐக்கிய தத்துவத்தை — உபதேசம் புரிந்தார் = (எனது யதார்த்த சொரூபமாக அறியும்படி) போதனை செய்தார்.

புவியினில் = உலகத்தில் — சர்வமும் ஆய் = (விவர்த்த ரூபத்தில், அதாவது அதிஷ்டானப் பிரம்மமான தனது உண்மை சொரூபம் வேறுபடாமல், சீவரின் ஆரோபமாகிய கற்பனை திருஷ்டியில் தோற்று கின்ற வேறு கற்பனை சொரூபத்தில்) எல்லாப் பொருள்களும் ஆய் — பொலிவது அதுவே = விளங்குவது அந்தப் பிரம்மமே — பூரணம் ஆனது அது = வியாபகம் அதாவது நிறைவு ஆனது அந்தப் பிரம்மம் — புரிந்து கொள்வாய் என = அறிந்துகொள்வாய் என்று — போதித்து அருளி = கூறுதல் செய்து — ஈசன் பாதத்துணையடையும் = ஈசுரனின் † திருவடியாகிய சச்சிதானந்தப் பிரம்ம சொரூபத்தின்

† ஸ்ரீ குமர குருபர சுவாமிகள், கந்தர் கலிவெண்பாவில் "யான் எனது என்று அற்ற இடமே திருவடியாக" என்று கூறியவாறு யான் எனது என்பது அற்ற இடமான பிரம்ம சொரூபத்தைத் திருவடியாகக் கூறினர். இவ்வாறு கூறியது, மேலே கூறியுள்ள "தத்துவம் அசி" மகா வாக்கியார்த்த அனுபவத்திற்குப் பொருந்து மாறு கூறியதாம்.

ஆத்ரவையடையும் — புண்ணியப் பயிற்சி = புண்ணியச் செயலைப் பயிலுதல் — தினம் பண்ணியே = நாள்தோறும் இடைவிடாமல் செய்தே — பயன் பெறவே = மோக்ஷமாகிய பயனைப் பெறும் பொருட்டே — வந்தார் = வருகை தந்தார்.

சரணம் – 2

[ முன்னுரை : இனி பகவத்கீதை, ஆறும் அத்தியாயம் 34 ஆம் சுலோகத்தில் அர்ச்சுனன் கூறிய வினவுக்கு, பகவான் விடையாகக் கூறிய 35 ஆம் சுலோகத்தைக் கூறுகின்றார்; ஆதலின் தொடர்பு பற்றி 34 ஆம் சுலோகத்தை இந்த முன்னுரையில் கூறுவது பொருத்த மாகும் ஆகலின் அச்சுலோகம் இங்கு கூறப்படுகிறது.

பகவத் கீதை, ஆறும் அத்தியாயம் 34 ஆம் சுலோகம். அர்ச்சுனன் கூறிய வினு :—

சஞ்சலம் ஹி மன : க்ருஷ்ண ப்ரமாதி பலவத்த்ருடம் |
தஸ்யாஹம் நிக்ரஹம் மன்யே வாயோரிவ ஸுதுஷ்கரம் ||

(இதன் பதவுரை) க்ருஷ்ண = கிருஷ்ணு! மன : = மனம், சஞ்சலம் = சஞ்சலமுடையது அதாவது அலையும் தன்மையுடையது, ப்ரமாதி = கலக்கத்தைச் செய்வது, பலவத் = வலிமையுடையது, த்ருடம் = திடமானது, ஹி = அன்றே?, அஹம் = நான், தஸ்ய= அதன், நிக்ரஹம் = அடக்கத்தை, வாயோ: இவ = காற்றை அடக்குதல் போல, ஸுதுஷ்கரம் = மிகவும் கடினம் என்று, மன்யே = கருதுகின்றேன். (என்றவாறு).

இவ்வாறு அர்ச்சுனன் கூறிய வினவுக்கு பகவான் விடையாகக் கூறிய 35 ஆம் சுலோகத்தைக் கூறுகின்றார்.]

பகவத் கீதை ஆறும் அத்தியாயம் 35 ஆம் சுலோகம்.

ஸ்ரீ பகவான் கூறிய விடை :—

அஸம் ஸயம் மஹாபாஹோ மனோ துர்நிக்ரஹம் சலம் |
அப்ப்யாஸேனது கௌந்தேய வைராக்யேணச க்ருஹ்யதே ||

(இதன் பதவுரை) மஹாபாஹோ = தோள்வலிமை படைத்த அர்ச்சுனு!, மன: = மனம், துர்நிக்ரஹம் = அடக்குதற்கு அரியது, சலம் = சஞ்சலமுடையது அதாவது அலையுந் தன்மை யுடையது, அஸம்சயம் = இதில் சந்தேகம் இல்லை, து=ஆனல், கௌந்தேய= குந்தியின் மைந்தனே!, அப்ப்யாஸேன = *ஆத்மப் பிரம்ம விசார ஞான அப்பியாசத்தாலும், வைராக்யேணச=வைராக்கியத்தாலும், க்ருஹ்யதே = அடக்க முடியும்.

* ஆத்மப் பிரம்ம விசார ஞான அப்பியாசம், வைராக்கியம் என்பவற்றின் விபரங்கள் 9 ஆம் பக்கம் முதல் கூறப் பெற்றுள்ளன.

அதனை = (இவ்வாறு பகவான் விடையாகக் கூறிய) அந்தச் சுலோகத்தின் பொருளை, உணர்வாய் என்று = நீ அறிவாயாக என்று, அர்ச்சுனற்குக் கீதை அருளிய கண்ணன் போலே = அருச்சுனனுக்குப் பகவத்கீதையை கிருபையுடன் உபதேசித்த ஸ்ரீ கிருஷ்ண பகவானைப் போலவே அருள் உபதேசம் செய்தார் = கிருபையுடன் உபதேசமாகிய போதனை செய்தார்.

மனோநாசம் வாசனாக்ஷயம் செய்து = (மேற்கூறிய ஆத்மப் பிரம்ம விசார ஞான அப்பியாசத்தாலும் வைராக்கியத்தாலும்) சங்கற்ப விகற்பரூப மனதின் நாசத்தையும், அகங்காராதி வாசனா (சம்ஸ்கார) நாசத்தையும் செய்து, வையகத்தில் = பூவுலகில், நீ ஜீவன்முக்தி எய்திடுவாய் என்று = நீ ஜீவித்து இருந்துகொண்டே சர்வதுக்க நிவிர்த்தி பரமானந்தப் பிராப்தியாகிய மோக்ஷத்தை அடைவாயாக என்று, கிருபை ஆசி அளித்த = கருணையுடன் ஆசீர்வாதம் (வாழ்த்து) செய்த (குருவானவர்), அருமை பெருமையான = அரிய மாட்சிமை யான, கீத = சொல்லினிமையுடையவராயும், கோவிந்த = கோவிந்த நாமம் தரித்தவராயும், பூஜ்ய பாத = (சீடர்களால்) பூஜிக்கப்படும் பாதங்களை யுடையவராயும் விளங்கும், சற்குருவாக = சத்தாகிய பரமாத்ம ஞானத்தை உபதேசிக்கும் சதாசாரமுள்ள ஞான குருவாக, வந்தார் = வருகை தந்தார். (என்றவாறு)

(பொழிப்புரை)

**பல்லவி**

எமது சுவாமியான, சத்தாகிய பரமாத்ம ஞானத்தை உபதேசிக்கும் சதாசாரமுடைய, ஞான குருநாதர் வருகை தந்தார். கிருபை செய்ய வருகை தந்தார். சதாகாலமும் ஞான உதவி செய்ய வருகை தந்தார்.

**அனுபல்லவி**

(பக்தர்களால் அலங்காரம் செய்யப்படும்) பூங்கொத்துக்களை அழகுறப்பூணும் திருமேனியையுடைய, நமது (இறைவனான), கோதண்டம் என்னும் தனுசைத் தாங்கிய, ஸ்ரீ இராமபிரானே (அருவ நிலையிலிருந்து உருவ நிலைக்கு) வந்து, ஸ்ரீ குரு கோவிந்த சுவாமி என்கிற திருப்பெயர் தாங்கிக்கொண்டு வருகை தந்தார்.

**சரணம் - 1**

(மோக்ஷ இச்சையையுடைய முமுக்ஷுக்களாகிய) நாம் பிறப்பு இறப்பு ஆகிய சுழற்சி வடிவ சமுசாரத்துன்ப சமுத்திரத்தைக் கடந்து, பரமான்மாவின் கிருபையாலான மோக்ஷப் பேரின்ப சமுத்திரத்தில், அன்புடன் அமிழ்ந்து மோக்ஷப் பேரின்பம் அனுபவிக்கும்படி செய்தார்.

உலகில் (சாம வேதத்தின் சாந்தோக்கிய உபநிடதத்தில் உள்ள "தத்துவம் அசி=அது நீயாக இருக்கிறாய்" என்னும் உப தேச மகா வாக்கியமானது) அது என்னும் சச்சிதானந்தப் பிரம்மம் நீ என்னும் சச்சிதானந்த ஆன்மாவாம்; நீ என்னும் சச்சிதானந்த ஆன்மா அது என்னும் சச்சிதானந்தப் பிரம்மமாம்; என்று கூறுகின்ற மேலான ஆத்மப்பிரம்ம ஐக்கிய தத்துவத்தை (எனது யதார்த்த சொரூபமாக அறியும்படி) போதனை செய்தார்.

உலகத்தில் (விவர்த்த ரூபத்தில், அதாவது அதிஷ்டானப் பிரம்மமான தனது உண்மை சொரூபம் வேறுபடாமல், சீவரின் ஆரோபமாகிய கற்பனை திருஷ்டியில் தோற்றுகின்ற வேறு கற்பனை சொரூபத்தில்) எல்லாப் பொருள்களுமாய் விளங்குவது அந்தப் பிரம்மமே. வியாபகம் அதாவது நிறைவு ஆனது அந்தப் பிரம்மம். அறிந்து கொள்வாய் என்று கூறுதல் செய்து ஈசுரனின் திருவடி யாகிய சச்சிதானந்தப் பிரம்ம சொரூபத்தின் ஆதரவை யடையும் புண்ணியச் செயலைப் பயிலுதல், நாள்தோறும் இடைவிடாமல் செய்தே மோக்ஷமாகிய பயனைப் பெறும் பொருட்டே வருகை தந்தார்.

**சரணம் – 2**

[முன்னுரை :- இனி பகவத்கீதை, ஆறும் அத்தியாயம் 34 ஆம் சுலோகத்தில் அர்ச்சுனன் கூறிய வினாவுக்கு, பகவான் விடையாகக் கூறிய 35 ஆம் சுலோகத்தைக் கூறுகின்றார்; ஆதலின் தொடர்பு பற்றி 34 ஆம் சுலோகத்தை இந்த முன்னுரையில் கூறுவது பொருத்த மாகும் ஆகலின் அச்சுலோகம் இங்கு கூறப்படுகிறது.

பகவத்கீதை, ஆறும் அத்தியாயம் 34ம் சுலோகம்.

அர்ச்சுனன் கூறிய வினா :—

**பொழிப்புரை :** கிருஷ்ணா! மனம் சஞ்சலமுடையது அதாவது அலையும் தன்மையுடையது, கலக்கத்தைச் செய்வது, வலிமை யுடையது, திடமானது, அன்றோ? நான் அதன் அடக்கத்தை காற்றை அடக்குதல் போல, மிகவும் கடினம் என்று கருதுகின்றேன்.

இவ்வாறு அர்ச்சுனன் கூறிய வினாவுக்கு பகவான் விடையாகக் கூறிய 35ம் சுலோகத்தைக் கூறுகின்றார்.]

பகவத்கீதை, ஆறும் அத்தியாயம் 35 ஆம் சுலோகம்.

ஸ்ரீ பகவான் கூறிய விடை :—

**பொழிப்புரை :** தோள் வலிமை படைத்த அர்ச்சுனா! மனம் அடக்குதற்கு அரியது, சஞ்சலமுடையது அதாவது அலையும்

தன்மையுடையது, இதில் சந்தேகம் இல்லை. ஆனால் குந்தியின் மைந்தனே! ஆத்மப்பிரம்ம விசார ஞான அப்பியாசத்தாலும், வைராக்கியத்தாலும் அடக்கமுடியும்.

(இவ்வாறு பகவான் விடையாகக் கூறிய) அந்தச் சுலோகத்தின் பொருளை, நீ அறிவாயாக என்று அருச்சுனனுக்குப் பகவத் கீதையை கிருபையுடன் உபதேசித்த ஸ்ரீ கிருஷ்ணபகவானைப்போலவே கிருபையுடன் உபதேசமாகிய போதனை செய்தார்.

(மேற்கூறிய ஆத்மப் பிரம்ம விசார ஞான அப்பியாசத்தாலும் வைராக்கியத்தாலும்) சங்கற்ப விகற்ப ரூபமனதின் நாசத்தையும், அகங்காராதி வாசனா (சம்ஸ்கார) நாசத்தையும் செய்து, பூவுலகில் நீ ஜீவித்து இருந்துகொண்டே சர்வதுக்க நிவர்த்தி பரமானந்தப் பிராப்தியாகிய மோக்ஷத்தை அடைவாயாக என்று, கருணையுடன் ஆசீர்வாதம் (வாழ்த்து) செய்த (குருவானவர்) அரிய மாட்சிமையான சொல்லினிமை யுடையவராயும், கோவிந்த நாமம் தரித்தவராயும், (சீடர்களால்) பூஜிக்கப்படும் பாதங்களை யுடையவராயும் விளங்கும், சத்தாகிய பரமாத்ம ஞானத்தை உபதேசிக்கும் சதாசாரமுள்ள ஞான குருவாக வருகைதந்தார். (என்றவாறு)

---

6 ஆம் பக்கத்தில் கூறியுள்ள, ஆத்மப் பிரம்ம விசார ஞான அப்பியாசம், வைராக்கியம் — அல்லது வைராக்கியம், ஆத்மப் பிரம்ம விசார ஞான அப்பியாசம்; என்னும் ஒன்றுக்கு ஒன்று உதவியான இருவித உபாயங்களாகிய மோக்ஷத்தின் அந்தரங்க (சமீபித்த) சாதனங்களின் விபரங்கள் வருமாறு.

(மேற்கூறிய இருவித சாதனங்களைக் குறித்த விபரங்கள் பகவத் கீதைக்கு ஸ்ரீ சிற்கனானந்தகிரி சுவாமிகள் இயற்றிய கூடார்த்த தீபிகை உரை நூலில் ஆறும் அத்தியாயம் இருபத்தி ஆறும் சுலோகத்தின் விரிவுரையிலும், ஸ்ரீ பகவத் கீதையை ஸ்ரீ பட்டனார் தமிழ்க் கவிகளாக இயற்றிய நூலுக்கு ஸ்ரீ பொன்னம்பல சுவாமிகள் இயற்றிய கூடார்த்த தீபிகை உரை நூலில் ஆறும் அத்தியாயம் இருபத்தி ஆறும் சுலோகத்திற்கு உரிய பத்தொன்பதாம் கவியாகிய "வாங்கி யைம்பொறி" என்னும் தலைப்பையுடைய கவியின் விரிவுரையிலும் கூறியுள்ளன. அவற்றை விளக்கிக் கூறுதல் வருமாறு)

[மனோநிக்கிரகத்திற்கு (மனதின் அடக்கத்திற்கு) அறிபடும் சர்வ துவைத அகங்காராதி நாமரூபப் பிரபஞ்சத்தின் ஸ்மரண (நினைவு) காலத்தில் செய்யத்தக்க உபாயமாகிய, வைராக்கியம் என்னும் உபாயம் கூறப்படுகிறது.]

வைராக்கிய உபாயமாவது — அஞ்ஞான திருஷ்டியினால் அத்தியாரோபம் (கற்பனை) செய்யப்பட்ட அறிபடும் சர்வதுவைத அகங்காராதி நாமரூபப் பிரபஞ்ச கற்பிதத் தோற்றமும், பரிச்

சின்னம் (பேதம்) ஆகலின், அசத் சட துக்க ரூபமே; என்று இவ்வாறு நிரந்தரம் (இடைவிடாமல்) சிந்தித்து, சர்வ துவைத அகங்காராதி நாமரூபப் பிரபஞ்ச கற்பிதத் தோற்றத்திலுள்ள இச்சையை (பற்றை) விடுதலாம்.

[மனோநிக்கிரகத்திற்குச் செய்யத்தக்க மேலான உபாயமாகிய, அறிபடும் சர்வதுவைத அகங்காராதி நாமரூபப் பிரபஞ்சத்தின் விஸ்மரணம் (நினைவின்மை) அமைந்த, ஆத்மப் பிரம்ம விசார ஞான அப்பியாசம் என்னும் உபாயம் கூறப்படுகிறது.]

ஆத்மப் பிரம்ம விசார ஞான அப்பியாச உபாயமாவது – சாக்ஷி யறிவோ டபேதமான சர்வசாக்ஷி யறிவாகிய (திருக்கு ஆகிய) அதிஷ்டான (ஆதார) சச்சிதானந்த அத்வைத ஆத்மப் பிரம்மத்தை அறியாமையாகிய அஞ்ஞான திருஷ்டியினால், அந்த அதிஷ்டான சச்சிதானந்த அத்வைத ஆத்மப் பிரம்மத்தில், அதனினும் விபரீத மாக (மாறாக) சொப்பனப் பிரபஞ்சம்போல, அத்தியாரோபம் (கற்பனை) செய்யப்பட்ட, அறிபடும் (திருசியமாகும்) சர்வ அசத்சட துக்க துவைத அகங்காராதி நாமரூபப் பிரபஞ்ச கற்பிதத் தோற்றமும், சாக்ஷியறிவோ டபேதமான சர்வசாக்ஷியறிவாகிய, ஜனனரகித (பிறப்பற்ற) அதிஷ்டான சச்சிதானந்த அத்வைத ஆத்மப் பிரம்மமே. ஆத்மப் பிரம்மத்தினும் வேறே வஸ்துவாக அற்பமும் இல்லை; என்று இவ்வாறு குருசாஸ்திரங்களின் உபதேசத்தின் பின்னர் நிரந்தரம் (இடைவிடாமல்) விசாரித்து, சாக்ஷி யறிவோ டபேதமான சர்வ சாக்ஷியறிவாகிய அதிஷ்டான சச்சி தானந்த அத்வைத ஆத்மப் பிரம்மத்தை அறிவதாகிய ஞான திருஷ்டியினால், அந்த ஆத்மப் பிரம்மத்தினும் விபரீதத் தோற்ற மாகிய, அறிபடும் சர்வதுவைத அகங்காராதி நாமரூபப் பிரபஞ்ச கற்பிதத் தோற்றமும், அபவாதம் (கற்பனை நிவிர்த்தி) ஆதலால், அந்தப் பிரபஞ்ச கற்பிதத் தோற்றத்தைக் காணாமையாம்.

(மேற்கூறியுள்ளவாறு, குரு சாஸ்திரங்களின் உபதேசத்தின் பின்னர் நிரந்தரம் விசாரிக்கத் தக்க "அகம் பிரம்ம அஸ்மி" என்னும் மகா வாக்கிய விசாரமுறையின் விளக்கம், இந்தப் பிரசங்கத்தின் பின்பு 13 ஆம் பக்கம் முதல் கூறப்பட்டுளது.)

இங்கு சுலோகத்தின் முதற் பாதியால் மனதின் அடநிக்கிரகம் கூடாது என்பதைக் கூறியருளினர். இரண்டாவது பாதியால் மனதின் கிரம நிக்கிரகம் கூடும் என்று கூறியருளினர்.

இங்கு பகவானுக்கு இது கருத்தாம். மன நிக்கிரகம் இருவகைத் தாம். அவை அடநிக்கிரகம், கிரமநிக்கிரகம் என்பனவாம். அவற்றுள் ஞானேந்திரியங்களும், கர்மேந்திரியங்களும் கோளகம் (சூக்ஷ்ம சரீர இந்திரியங்கள் இருக்கும் தூல சரீரத்திலுள்ள இடம்) மாத்திர

நிரோதத்தால் அடமாய் நிக்கிரகிக்கப்படுவன போல, மனதையும் அடமாய் நிக்கிரகம் பண்ணலாம் என்னும் பிராந்தி (கற்பனை) மூடனுக்கு உண்டாம். ஆனால் இந்திரியங்களைப்போல மனதின் அடநிக்கிரகம் கூடாது. எப்படி என்றால், மனம் இருத்தற்கு இடம் இருதயமாம். அந்த இருதயத்தை அடமாய் நிரோதம் செய்ய முடியாது. ஆகவே மனதை அடமாய் நிரோதம் செய்வதாகிய அடநிக்கிரகம் கூடாது. மற்றோ வைராக்கியம், ஆத்மப் பிரம்ம விசார ஞான அப்பியாசம் என்னும் இருவித சாதனங்களால் நிக்கிரகம் செய்வதாகிய கிரம நிக்கிரகத்தால் மனம் அடங்குமாதலால், மனதைக் கிரம நிக்கிரகத்தால் அடக்குதலே உசிதமானதாம்; என்பதாம்.

இவ்வாறு பகவான் மனமடக்குதல் பூர்வகம் மோக்ஷமடைவதற்காகக் கூறும் மோக்ஷத்தின் அந்தரங்க (சமீபித்த) சாதனங்களாகிய வைராக்கியம், ஆத்மப் பிரம்ம விசாரஞான அப்பியாசம் என்னும் இரண்டு சாதனங்களினுள், பிறநூல்கள் கூறுகின்ற மோக்ஷத்தின் அந்தரங்க சாதனங்கள் அனைத்தும் அடங்குவனவாம்.

ஸ்ரீ பகவான் கூறிய, மோக்ஷத்தின் அந்தரங்க சாதனங்களாகிய வைராக்கியம், ஆத்மப் பிரம்ம விசார ஞான அப்பியாசம் என்னும் இரண்டு சாதனங்களைக் குறித்து, ஸ்ரீ சங்கராசாரிய சுவாமிகள் விவேக சூடாமணி என்னும் நூலில் திருஷ்டாந்தத்துடன் கூறும் விபரம் வருமாறு.

விவேகசூடாமணி – சமஸ்கிருத சுலோக நூலில் கூறியுள்ள "வைராக்கிய போதௌ" என்னுந் தலைப்பையுடைய 374 ஆம் சுலோகத்துக்குத் தமிழில் இயற்றிய கவி நூலில் உள்ள 425 ஆம் கவி வருமாறு.

பரவிடும் ஓர்பட் சிக்குப் பறந்திட இருபட் சம்போல்
மருவிடும் மோட்ச மாகும் மாடிமேல் சீவன் ஏற
விரதிநல் விவேகம் என்ன வேண்டிய திரண்டு பட்சம்
இருமையில் ஒன்றி லாதேல் ஈதின்மீ தேற வொண்ணு.

(இதன் பொருள்) பறக்கும் ஒரு பட்சிக்குப் பறப்பதற்கு (ஒன்றுக்கு ஒன்று உதவியாக அமைந்துள்ள சாதனங்களான) இரண்டு இறக்கைகள் வேண்டியனவாதல் போல; (பந்தமாகிய கீழ் வீட்டை விட்டு) அடையத்தக்க மோக்ஷமாகிய மாடியின் (மேல் வீட்டின்) மேல், முமுட்சு சீவனாகிய (மோக்ஷ விருப்பமுடைய சீவனாகிய) பட்சி ஏறுவதற்கு, (ஒன்றுக்கு ஒன்று உதவியாக அமைந்துள்ள சாதனங்களான) வைராக்கியம், நல்ல விவேகம் (ஆத்மப் பிரம்ம விசார ஞான அப்பியாசம்) என்னும், இரண்டு சாதனங்களாகிய பட்சங்கள் வேண்டியனவாம். இந்த இரண்டு சாதனங்களாகிய

பட்சங்களில் ஒன்று இல்லாவிட்டால் (மற்ற ஒன்றும் ஆக்கமற்றதாய் விடுமாதலால்) இந்த மோக்ஷமாகிய மாடியின் மேல் ஏறமுடியாது. (என்றவாறு)

"அத்யந்த வைராக்கிய வத" என்னுந் தலைப்பையுடைய 375 ஆம் சுலோகத்துக்கு உரிய 426 ஆம் கவி வருமாறு.

மிகவுமே விரக்த ஞானேன் மேவுவன் சமாதி தன்னை
புகழ்சமா தியைய டைந்தோன் பொருந்துவன் திடபோ தத்தை
இகழ்விலாப் போதம் உற்றேன் எய்துவன் முத்தி தன்னை
தகைமைசேர் முத்தன் என்றும் தடையில் ஆனந்தம் உண்பன்.

(இதன் பொருள்) மிகவும் வைராக்கியம் உடையவன், (ஆத்மப் பிரம்ம விசார ஞான அப்பியாசமாகிய) சமாதியைப் பொருந்துவான். புகழத் தக்க சமாதியை யடைந்தவன், (அஞ்ஞான சந்தேக விபரீதங் களாகிய தடைகளால் அதிடமாக உள்ள ஞானத்தின் அதிடத் தன்மை நீங்கித்) திட ஞானத்தை யடைவான். குறைவற்ற திட ஞானத்தையடைந்தவன், (சம்சார பந்தம் என்னும் அகங்காரக் கிரந்தியின் விடுதலையாகிய) மோக்ஷத்தை யடைவான். மோக்ஷ உரிமையை யடைந்த முக்தனானவன் எக்காலமும் தடையின்றிய (இடையருத) மோக்ஷப் பேரின்பம் அனு-விப்பான். (என்றவாறு)

———

இதுவரை வைராக்கியம், ஆத்மப்பிரம்ம விசார ஞான அப்பியாசம்; என்னும் இருவித சாதனங்களின் விபரங்கள் கூறப்பட்டன. இனி 10 ஆம் பக்கத்தில் கூறியுள்ள, ஆத்மப் பிரம்ம விசார ஞான அப்பியாச விபரங்களினுள் கூறப்பெற்ற, குருசாஸ்திரங்களின் உபதேசத்தின் பின்னர் நிரந்தரம் விசாரிக்கத் தக்க "அகம் பிரம்ம அஸ்மி" என்னும் மகாவாக்கிய விசார முறையின் விளக்கம் கூறப் படுகிறது.

குருவானவர், சர்வதுக்க நிவிர்த்தி பரமானந்தப் பிராப்தி வடிவ மோக்ஷத்தை விரும்பும் முமுக்ஷுக்களாகிய சீடர்களுக்கு, வேத சாஸ்திரங்கள் கூறுகின்றபடி விளங்கும் முறையில் உபதேசிக்கும் உபதேச மகா வாக்கியமானது,* "தத்துவம் அஸி = அது நீயாக இருக்கிறாய்; அதாவது சர்வசாக்ஷியறிவான சச்சிதானத்தப் பிரம்ம மாகிய அது, சாக்ஷியறிவான சச்சிதானந்த ஆத்மாவாகிய நீயாக இருக்கிறாய்" என்னும் மகாவாக்கியமாம்.

சீடனானவன் குருவினிடம் உபதேச மகாவாக்கியம் கேட்டறிந்த பின்பு, விசாரஞ்செய்தல் வாயிலாக அனுபவிக்கத்தக்க அனுபூதி மகாவாக்கியமானது, உபதேச மகாவாக்கியத்தின் கருத்து அடங்கிய தான, ** "அகம் பிரம்ம அஸ்மி = நான் பிரம்மமாக இருக்கிறேன்; அதாவது சாக்ஷியறிவான சச்சிதானந்த ஆத்மாவாகிய நான், சர்வ சாக்ஷியறிவான சச்சிதானந்தப் பிரம்மமாக இருக்கிறேன். [பிரம்மம் அகம் = பிரம்மம் நானாக இருக்கிறேன்; அதாவது சர்வசாக்ஷியறி வான சச்சிதானந்தப் பிரம்மம், சாக்ஷியறிவான சச்சிதானந்த ஆத்மாவாகிய நானாக இருக்கிறேன். சர்வம் பிரம்மம் = சர்வ மும் பிரம்மமாகவே இருக்கிறது; அதாவது அறிபடும் வியஷ்டி (தனி) பஞ்சகோசங்களும், சமஷ்டி (எல்லாப்) பஞ்சகோசங்களும் ஆன சர்வ நாம ரூபப் பிரபஞ்ச கற்பிதத் தோற்றமும் (ஞான திருஷ்டியினால் நிவிர்த்தியாய்) சாக்ஷியறிவோடு அபேதமான சர்வசாக்ஷியறிவாகிய சச்சிதானந்த ஆத்மப்பிரம்மமாகவே இருக்கிறது]." என்னும் மகா வாக்கியமாம்.

இத்தகைய "அகம் பிரம்ம அஸ்மி" என்னும் மகா வாக்கியத் தின் விசாரமுறை வருமாறு.

---

* தத்துவம் அஸி – என்னும் உபதேச மகாவாக்கியமானது, சாமவேதத்தின் சாந்தோக்கிய உபநிடதம் கூறுவதாம்.

** அகம் பிரம்ம அஸ்மி – என்னும் அனுபூதி மகா வாக்கிய மானது, யஜுர் வேதத்தின் பிருகதாரண்ணிய உபநிடதம் கூறு வதாம்.

யஜுர் வேதத்தின் பிருகதாரண்ணிய உபநிடதத்தில் உள்ள

## அகம் பிரம்ம அஸ்மி - என்னும்

# மகாவாக்கிய விசார சங்கிரகம்

### அகம் பிரம்ம அஸ்மி = நான் பிரம்மமாய் இருக்கிறேன்

### அகம் சப்த விசாரம்

[அதத்வியாவிருத்தி இலக்கணத்தால் (ஆத்மப் பிரம்மம் அல்லாதனவற்றை நிஷேதித்தல் இலக்கணத்தால்) ஆத்மப் பிரம் மத்தை அறிவிக்கும் "நேதி நேதி = இது அன்று இது அன்று; அதாவது இது எனுந் தன்மையால் அறியப்படுகிற சடரூப காரண அஞ்ஞான மாயையின் காரியமாகிய தூல சூக்ஷுமப் பிரபஞ்ச மானது, இதை இது எனுந் தன்மையால் அறிகிற சித்துரூப ஆத்மப் பிரம்மம் அன்று. இது எனுந் தன்மையால் அறியப்படுகிற சடரூப காரிய தூல சூக்ஷுமப் பிரபஞ்சத்தின் காரணமாகிய அஞ்ஞான மாயையானது, இதை இது எனுந் தன்மையால் அறிகிற சித்துரூப ஆத்மப் பிரம்மம் அன்று" என்னும் யஜுர் வேதத்தின் பிருகதாரண் ணிய உபநிடதம் கூறுகின்றபடியான, சித்து சட விசார முறை; அதாவது, சித்து (அறிவு) ஆன ஆத்மப் பிரம்மம் நான், சடம் (அறிபடுவது) ஆன இது நானன்று; என்னும் ஆராய்ச்சி முறை வருமாறு]

சித்துசடவிசாரம் எனினும், திருக்குத்திருசிய விசாரம் எனினும் பொருந்தும்.

(இவ்வாறு அதத் வியாவிருத்தி இலக்கணத்தால் சுருதியானது கூறும் பொருள்கள், வேதாந்த சூடாமணி "ஆக முதலன" என் னும் தலைப்பையுடைய கவியிலும், கைவல்லிய நவநீதம் "தன்பதி யல்லாப் பேர்கள்" என்னுந் தலைப்பையுடைய கவியிலும், பிற நூல் களிலும் கூறப்பெற்றுள்ளன)

வியஷ்டி (தனி) தூலம், சூக்ஷுமம், காரணம் என்னும் மூன்று சரீரங்களும் ஐந்து கோசங்களாக உள்ளன. அவையாவன - தூல சரீரம் அன்னமய கோசமாயும், சூக்ஷும சரீரம் பிராணமயகோசம் - மனோமயகோசம் - விஞ்ஞானமய கோசம் என மூன்று கோசங் களாயும், காரணசரீரம் ஆனந்தமய கோசமாயும் உள்ளன.

திருஷ்டாந்தம் (உவமானம்) — [ஸ்ரீ சங்கராசாரிய சுவாமிகள் அருளிய ஏகசுலோகீ, என்னும் நூலில் "உனக்கு ஜோதி யாது? பகலில் சூரியன்; இரவில் தீபம் முதலியன. இவ்வாருகுக. சூரியனையும் தீபத்தையும் பார்க்கும் விஷயத்தில் ஜோதி யாது? நேத்திரமாம்" எனவும்; ஸ்ரீ கண்ணுடைய வள்ளலார் அருளிய

ஒழிவிலொடுக்கம், என்னும் நூலில் "அறிந்த தெல்லாம் பொய் என்ற அத்துவிதியார்க்கும்" என்று கூறியுள்ள கவியடிக்கு, ஸ்ரீ சிதம்பர சுவாமிகள் இயற்றிய உரையில் "கண்ணினுல் அறிந்த காட்சி யெல்லாம் கண்ணுகாதவாறு போல், எம்மால் எதிரிட்டு அறிந்த வெல்லாம் யாம் அல்லோம், இவை மித்தியா ரூபம் என்று அவற்றை நீக்கி நின்ற வேதாந்தியாருக்கும்" எனவும் கூறியுள்ள, கண்ணும் காட்சியும் ஆன திருஷ்டாந்தம் கூறப்படுகிறது]

திருஷ்டாந்தம் :—

காட்சிப் பொருளானது, கண்ணுக்கு அன்னியமாயும் (வேருயும்) பாகியமாயும் (வெளியிலாயும்) இருக்குங் காரணத்தால், அக்கண்ணி னுல் இதுகாட்சிப் பொருள் என இது எனுந்தன்மையால் அறியப் படுகிறதாதலால், இவ்வாறு அறியப்படும் அறிவற்ற சடரூப காட்சிப் பொருளானது, இதை யறியும் சித்து ரூப கண் அன்ருனது (ஆகாதது) போல —

[இனி ஸ்ரீ சங்கராசாரிய சுவாமிகள் முதலிய ஆன்ருேர்கள் அருளிய நூல்களில் கூறியுள்ள, காண்பானும் கடமும் ஆன திருஷ்டாந்தம் கூறப்படுகிறது]

திருஷ்டாந்தம் :—

கடமானது, காண்பானுக்கு அன்னியமாயும் பாகியமாயும் இருக்குங் காரணத்தால், அக்காண்பானுல் இது கடம் என இது எனுந் தன்மையால் அறியப்படுகிறதாதலால், இவ்வாறு அறியப் படும் அறிவற்ற சடரூப கடமானது, இதை யறியும் சித்து ரூப காண்பான் அன்ருனது (ஆகாதது) போல —

தாஷ்டாந்தம் (உவமேயம்) — சீவனின் அத்தியாசத்துடன் (கற்பனையுடன்) கூடிய நான் என்னும் விருத்திக்கு அறியப்படுகிற கற்பனைப் பொருளான அன்னமய கோசமானது ; சீவனின் அத்தியாசமின்றிய (கற்பனையின்றிய) நான் என்னும் விருத்திக்குச் சுயம்பிரகாசத்தினுல் (தனது அறிவாகிய பிரகாசத்தினுல்) விளங்கு கிற* அதிஷ்டான மெய்ப் பொருளான சித்துரூப சாக்ஷியறிவுக்கு, அன்னியமாயும் (வேருயும்) பாகியமாயும் (வெளியிலாயும்) இருக்குங் காரணத்தால், அச்சாக்ஷியறிவினுல் இது அன்னமய கோசம் என இது எனுந் தன்மையால் அறியப்படுகிறதாதலால், இவ்வாறு அறியப்படும் அறிவற்ற சடரூப அன்னமய கோசமாகிய இது, இதை யறியும் சுயம்பிரகாச சித்துரூப சாக்ஷியறிவாகிய நான் (ஆத்மா) அன்று

* அதிஷ்டானம் = நிலைக்களம் — நிர்விகாரமாய் (மாறுபா டின்மையாய்) இருந்துகொண்டு, கற்பிதத்திற்கு ஆசிரயமாய் (ஆதார இடமாய்) இருப்பது. இதன் விளக்கம், கைவல்லிய நவநீதம், ஸ்ரீ பொன்னம்பல சுவாமிகளின் உரை நூலில் 109 ஆம் பிரசங்கத்திலும் ; விசார சாகரம் 149 ஆம் பிரசங்கத்திலும் காண்க.

இவ்வாறே, பிராணமய கோசம், மனோமய கோசம், விஞ்ஞான மய கோசம், ஆனந்தமய கோசம் ஆகியவைகளும், இப்பஞ்ச கோசங்களை நிஷேதித்த (நீக்கிய) பின்பு தோற்றும் இப்பஞ்சகோசங் களின் அபாவ ரூபமான சூனியமும் நான் (ஆத்மா) அன்று.

இப்பஞ்சகோசங்களையும் சூனியத்தையும் அறிபடு பொருள்கள் ஆகும்படி அறிகின்ற சுயம்பிரகாச சித்துரூப சாக்ஷியறிவானது, இப் பஞ்சகோச சூனியங்களை இது நானன்று இது நானன்று என நிஷே திக்குங்கால் (நீக்குங் காலத்தில்) இப்பஞ்சகோச சூனியங்கள், சித்து ரூப சாக்ஷியறிவுக்கு அன்னியமாயும் பாகியமாயும் இருக்குங் காரணத்தால் சித்து ரூப சாக்ஷியறிவினுல் இது எனுந் தன்மையால் அறியப்பட்டு நிஷேதிக்கப்பட்டபின், இப் பஞ்சகோச சூனியங் களாகிய எல்லாவற்றின் அன்னியமாயும் (வேருயும்) ஆந்தரமாயும் (உள்ளாயும்) அதற்குள்ளாய் அதை அறிவதற்கு வேறு அறிவு இல்லாததாயும், இவ்வாறு நிஷேதிக்கும் சீவனின் அன்னியமல்லாத யதார்த்த சொரூபமாயும் இருத்தலால் இது எனுந் தன்மையால் அறியப்படாததாயும் நிஷேதிக்கப்படாததாயும், அந்நிஷேதத்தின் அவதி (முடிவு) ரூபமாய் மிஞ்சுகின்றதாயும் இருக்குங் காரணத்தால் (அச்சித்துரூப சாக்ஷியறிவானது) சுயம்பிரகாசத்தினுல் (தனது அறிவாகிய ஒளியினுல்) விளங்குகின்றதாதலால், இவ்வாறு விளங்கும் சுயம் பிரகாச சித்துரூப சாக்ஷியறிவே நான் (ஆத்மா).

குறிப்பு :- பஞ்சகோசங்களையும் சூனியத்தையும் நிஷேதிப்ப தாவது (நீக்குவதாவது) ; இப்பஞ்சகோச சூனியங்களிலான நான் என்னும் அகங்கார அபிமானத்தை நிஷேதிப்பதே (நீக்குவதே)யாம்.

இத்தகைய சுயம் பிரகாச சித்துரூப சாக்ஷியறிவாகிய ஆன்மாவை எவ்வாறு அறியக்கூடும் எனின்; நான் சாக்ஷியறிவான ஆன்மாவை அறிகின்றேன் என்னுங் கர்த்திருத் தன்மையும், என்னுல் சாக்ஷியறி வான ஆன்மா அறியப்படுகின்றது என்னுங் கர்மத்தன்மையும் நீங்கி, சாக்ஷியறிவான ஆன்ம வடிவமாத்திரமாக நிலைத்தலாகிய * சாக்ஷாத் கார (நேர்படுதல்) அனுபவத்தில், சாக்ஷியறிவாகிய ஆன்மாவானது சுயம் பிரகாசத்தினுல் அறிபவனின் யதார்த்த வடிவமாகவே விளங்கு வதாம். ஆதலால் அவ்வாருன சாக்ஷாத்கார (நேர்படுதல்) வடிவ அனுபவத்தினுல் அறிபடு பொருளாகஇன்றி அறிபொருளாகிய தானு கவே அறியக்கூடும் என்றறிக.

இவ்வாறு அறியக்கூடும் என்பதில் அறிதல் அறியப்படுதல் என்னும் பேதம் காணப்படுகின்றதே எனின்; சித்துரூப சாக்ஷியறி

* சாக்ஷாத்காரம் (நேர்படுதல்) = விஷய சேதனத்தோடு விருத்தி சேதனத்திற்கு உண்டாம் அபேதமே பிரத்தியக்ஷ ஞான மெனப்படு கின்றது. இதனையே அபரோக்ஷஞான மென்றும், சாக்ஷாத்காரம் என்றும் கூறுவர் – என்பது விசாரசாகரம் 211 ஆம் பிரசங்கடிப் பணம் கூறுவதாம்.

வாகிய ஆன்மாவானது, சுயம் பிரகாசத்தினுல் தாஞகவே விளங்குவ தாமாதலால் அப்பேதம் அறிவிக்கும் நிமித்தமான சொல் மாத்திரமே யன்றி யதார்த்த மன்று; என்றறிக. இவ்வாறு கூறியது ஸ்ரீ குமார தேவ சுவாமிகள் அருளிய சிவதரிசன அகவலில், "நான், நீ, சிவம் என நவிற்றிடும் மூன்றும் சொல் மாத்திரமே சொரூபமது ஒன்றே" எனவும், "பின்ஞசத்தியிற் பிரிவைக் குறித்தே இவ்வகை மூன்ருய் இயம்புரையன்றிப் பார்த்துடன் நோக்கில் பரம் பொருள் ஒன்றே" எனவும் கூறியுள்ளது போலவும், இவ்வாறே பிற நூல்களில் கூறி யுள்ளது போலவும் கூறியதாம்.

கோசங்கள் ஓர் அவஸ்தையில் கண்டது மற்ருேர் அவஸ்தையில் காணுது அழிதலால் அசத்தாயும், அறிபடும் அறிவற்ற பொருள்க ளாதலால் சடமாயும், அப்பிரியமாய்க் கைவிடப்படுவதால் துக்க மாயும் இருக்கின்றன.

கோசங்களை அறியும் சாக்ஷியறிவாகிய ஆத்மவடிவ நான், இறப்பு எதிர்வு நிகழ்வு ஆகிய முக்காலங்களிலும் ஒரே தன்மையாக இருத் தலால் சத்தாயும்; முக்காலங்களிலும் தோற்றுகின்ற சாக்கிர, சொப் பன, சுழுத்திகளில் தோற்றும் ஸ்திர, அஸ்திர, மூலாக்ஞான விஷயங் களை (பொருள்களை) சுயம் பிரகாசத்தால் (தனது அறிவாகிய ஒளி யினுல்) அறிவதால் சித்தாயும்; மேலான பிரியத்திற்கு விஷயம் (பொருள்) ஆதலால் ஆனந்தமாயும் இருக்கின்றேன்.

பிரம்ம சப்த விசாரம்.

சமஷ்டி (எல்லாம் ஆன) விராட்டு, இரண்ணிய கர்ப்பம், அவ் வியாகிருதம் என்னும் ஈசுரனது மூன்று சரீரங்களும், ஐந்து கோசங் களாக உள்ளன; அவையாவன :- விராட்டு சரீரம், சமஷ்டி அன்ன மயகோசமாயும்; இரண்ணிய கர்ப்ப சரீரம், சமஷ்டி பிராணமய கோசம் மனேமய கோசம் விஞ்ஞானமய கோசம் என மூன்று கோசங் களாயும்; அவ்வியாகிருத சரீரம், சமஷ்டி ஆனந்தமய கோசமாயும் உள்ளன.

சீவனது வியஷ்டி பஞ்சகோசங்களும் அவற்றின் அபாவரூபமான சூனியமும், சுயம்பிரகாச சித்துரூப சாக்ஷியறிவாகிய ஆத்மா அன்ருன வாறுபோல — ஈசுரனது சமஷ்டி பஞ்சகோசங்களும் அவற்றின் அபாவ ரூபமான சூனியமும், சுயம் பிரகாச சித்து ரூப சர்வசாக்ஷி யறிவாகிய பிரம்மம் அன்று.

சீவனது சுயம் பிரகாச சித்து ரூப சாக்ஷியறிவே, ஆத்மா ஆன வாறுபோல - ஈசுரனது சுயம் பிரகாச சித்துரூப சர்வசாக்ஷி யறிவே பிரம்மம் ஆம்.

சீவனது சுயம் பிரகாச சித்துரூப சாக்ஷி யறிவாகிய ஆத்மாவா னது, சாக்ஷாத்கார அனுபவத்தில் சுயம் பிரகாசத்தினுல் விளங்கு

கின்றவாறு போல — ஈசுரனது சுயம் பிரகாச சித்துரூப சர்வ சாக்ஷி யறிவாகிய பிரம்மமானது, சாக்ஷாத்கார அனுபவத்தில் சுயம் பிரகா சத்தினுல் விளங்குவதாம்.

சீவனது வியஷ்டி பஞ்சகோசங்கள் அசத்தாயும், சடமாயும், துக்க மாயும் இருக்கின்றவாறுபோல - ஈசுரனது சமஷ்டி பஞ்ச கோசங்கள் அசத்தாயும், சடமாயும், துக்கமாயும் இருக்கின்றன.

சீவனது சுயம் பிரகாச சித்துரூப சாக்ஷி யறிவாகிய ஆத்மாவா னது. சத்தாயும், சித்தாயும், ஆனந்தமாயும் இருக்கின்றவாறுபோல— ஈசுரனது சுயம் பிரகாச சித்துரூப சர்வ சாக்ஷி யறிவாகிய பிரம்ம மானது சத்தாயும், சித்தாயும், ஆனந்தமாயும் இருக்கின்றது.

அஸ்மி சப்தார்த்த சிந்தனம்.

இவ்வாறு அகம் சப்தத்தின் விசாரத்தாலறிந்த அதிஷ்டான சுயம் பிரகாச சித்துரூப சாக்ஷியறிவாகிய ஆன்மாவிற்கும், பிரம்ம சப்தத்தின் விசாரத்தாலறிந்த அதிஷ்டான சுயம் பிரகாச சித்து ரூப சர்வ சாக்ஷி யறிவாகிய பிரம்மத்திற்கும், சச்சிதானந்த ரூப லக்ஷணம் ஏகம் (ஒன்று) ஆதலால் இவ்விரண்டும் [ கடாகாசமும் மகாகாசமும் ஆகிய இரண்டும் ஒன்ருனவாறு போல ] எப்போதும் அஸ்மிபதத் தின் இருக்கின்றேன் என்னும் அர்த்த வடிவ ஏகம் (ஒன்று) ஆம் ; ஆதலின், அகம் பிரம்மம் (நான் பிரம்மமாக இருக்கின்றேன்) பிரம்மம் அகம் (பிரம்மம் நாஞக இருக்கின்றேன்).

இந்த அதிஷ்டான சுயம் பிரகாச சித்துரூபசாக்ஷி யறிவாகிய ஆன்மா வோடபேதமான, அதிஷ்டான சுயம் பிரகாச சித்துரூப சர்வ சாக்ஷியறிவாகிய பிரம்மமான நமது சத்து, சித்து, ஆனந்த அத்வைத வடிவத்தை அகண்டாகார விருத்தியினுல் நன்ருய்க் கண்டால், நமது அதிஷ்டான ஆன்மாவோடபேதமான பிரம்ம சொரூபத்தில் அத்தி யாசமாய் (கற்பனையாய்)த் தோற்றுகிற திருஷ்டநஷ்ட சுபாவமுடைய (பார்க்கும் போதே அழியும் இயல்புடைய) வியஷ்டி சமஷ்டியாகிய சர்வப் பிரபஞ்சமும் ; [ அதிஷ்டான சுத்தியை (கிளிஞ்சிலே) நன்ருய்க் கண்டால், அவ்வதிஷ்டான சுத்தியில் அத்தியாசமாய் (கற்பனை யாய்)த் தோற்றுகிற வெள்ளியானது, அபவாதமாய் (கற்பனுநிவிர்த் தியாய் அதிஷ்டான சுத்தி மாத்திரமாய் மிஞ்சுவதுபோல] அபவாத மாய் அதிஷ்டான ஆன்மாவோடபேதமான பிரம்மமாகிய நமது சத்து சித்து ஆனந்த அத்வைத சொரூப மாத்திரமாக மிஞ்சுகிறது ; ஆகலின் சர்வம் பிரம்மம் (சர்வமும் பிரம்மமாகவே இருக்கின்றது).

அகம் பிரம்மம் என்னும் அப்பியாச ஞானத்தால் பரிச்சின்னப் பிராந்தி நீங்குகிறது ; பிரம்மம் அகம் என்னும் அப்பியாச ஞானத் தால் பரோக்ஷப் பிராந்தி நீங்குகிறது ; சர்வம் பிரம்மம் என்னும் அப்பியாச ஞானத்தால் துவைதப் பிராந்தி நீங்குகிறது.

அத்தியாசம், அத்தியாரோபம், ஆரோபம், பிராந்தி, கற்பனை என்பன ஒரு பொருட் சொற்கள்.

இவ்வாறு அகம் பிரம்மம், பிரம்மம் அகம், சர்வம் பிரம்மம் என்று நிரந்தரம் (இடைவிடாமல்) அப்பியசித்து அஞ்ஞான, சந்தேக, விபரீதங்களை நீக்கிப் பிரம்ம மாத்திரமாக நிலைத்தலாகிய திட அபரோக்ஷ ஞானத்தை (மெய்யுணர்தலை) யடைய வேண்டும்.

இவ்வாறு திட அபரோக்ஷ ஞானத்தை அடைதலால், அக்கணமே காமம், இறப்புப் பிறப்பு முதலிய சர்வதுக்க நிவிர்த்தி பரமானந்தப் பிராப்தி வடிவ மோக்ஷம் பிரத்யக்ஷ பலமாக அடையப்படும்.

## தொகுப்பு

இவ்வாறு முமுக்ஷுக்கள் (சர்வதுக்க நிவிர்த்தி பரமானந்தப் பிராப்தி வடிவ மோக்ஷவிருப்பமுடைய அதிகாரிகள்) "அகம் பிரம்ம அஸ்மி" என்னும் அனுபூதி மகாவாக்கிய விசாரம் செய்து, வியஷ்டி (தனி) அன்னமய கோசம் முதல் ஆனந்தமயகோசம் வரை அறிபடு பொருள்கள் ஆதலால் நானன்று என நிஷேதித்து, அவைகட்கு வேருய் அதற்குப் பின்பு தோற்றும் பஞ்ச கோசங்களின் அபாவ ரூபமான சூனியத்தையும் அறிபடு பொருளாதலால் நானன்று என நிஷேதித்து, உள்ளில் பஞ்சகோச சூனியங்களைக் காணும் சுயம் பிரகாச சித்து ரூப சாக்ஷியறிவு நான் (ஆத்மா) என்று அறிந்து, அவ்வாறு அறிந்த அற்பமாகிய அதாவது பரிச்சின்னமாகிய பிராந்தியையும், சமஷ்டி (எல்லாப்) பஞ்சகோசங்களையும் அவற்றின் அபாவ ரூபமான சூனியத்தையும் நிஷேதித் தறிந்த, சுயம் பிரகாச சித்து ரூப சர்வசாக்ஷி யறிவாகிய பிரம்மத்தோடு அபேதமாக்கும் "அகம் பிரம்ம அஸ்மி (நான் பிரம்மமாய் இருக்கிறேன்)" என்னும் அகண்டாகார விருத்தியினுல் விடுத்து; அவ்வாறு பிரம்மத்தை அறிந்ததில் உள்ள பரோக்ஷமாகிய பிராந்தியையும், பிரம்மம் அகம் என்னும் அகண்டாகார விருத்தியினுல் விடுத்து; முன் நிஷேதித்த வியஷ்டி சமஷ்டி பஞ்சகோசங்கள் வேறு என்னும் துவைதமாகிய பிராந்தியையும் சர்வம் பிரம்மம் என்னும் அகண்டாகார விருத்தியினுல் விடுத்து;

(*1) அகம் பிரம்மம், பிரம்மம் அகம், சர்வம்பிரம்மம் என்னும் அகண்டாகார விருத்தியையும், அத்வைத அவஸ்தானரூபம் என்னும் சாத்தியமான நிருவிகற்ப அனுபவமுறும் பொருட்டு, அகங்கார விபரீத பாவனையைப் போக்கும் நிதித்தியாசன பரிபாகமாகிய சமாதி வசத்தினுல், உறங்கினவன் கையிற் பதார்த்தம் நழுவுவதுபோல நழுவச் செய்து, வெகுவித துக்கங்கட்குக் காரணமான சித்த விகற்பங்கள் அனைத்துந் தொலைத்துச் சர்வதுக்க நிவிர்த்தி பரமானந்தப் பிராப்தி வடிவ மோக்ஷம் அடையும் பொருட்டு, அகண்ட ஏகரசமா

யுள்ள பரிபூரண சச்சிதானந்த அத்வைதப் பிரம்ம மாத்திரமாக நிலைத்தலாகிய அனுபவத்தை யடைய வேண்டும்.

இவ்வாருன அனுபவ திட அபரோக்ஷ ஞானத்தை (மெய்யுணர்தலை) அடைதலால் (*2) அக்கணமே காமம், இறப்பு, பிறப்பு முதலிய சர்வதுக்க நிவிர்த்தி பரமானந்தப்பிராப்தி வடிவமோக்ஷம்(பேரின்ப வீடு) பிரத்தியக்ஷ பலமாக அடையப்படும்.

19-20ஆம் பக்கங்களில் (*1) "அகம் பிரம்மம், பிரம்மம் அகம், சர்வம் பிரம்மம் என்னும் + அனுபவத்தை யடைய வேண்டும்" என்றதற்கு உதாரணம்.

---

# கைவல்லிய நவநீதம்

(ஸ்ரீ தாண்டவராய சுவாமிகள் அருளியது)

## [தத்துவ விளக்கப் படலம்]

தஞ்சமாம் குருவும் சொன்ன தத்துவ வழிதப் பாமல்
பஞ்சகோ சமுங்க டந்து பாழையும் தள்ளி உள்ளில்
கொஞ்சமாம் இருப்பும் விட்டுக் கூடஸ்தன் பிரமம் என்னும்
நெஞ்சமும் நழுவி ஒன்ருய் நின்றபூ ரணத்தைக் கண்டான்.

அனுபவா னந்த வெள்ளத்(து) அழுந்தியே அகண்டம் ஆகித்
தனுகர ணங்க ளாதி சகலமும் இறந்து சித்தாய்
மனதுபூ ரணமாய்த் தேகம் ஆனசற் குருவும் காண
நனவினில் சுழுத்தி யாகி நன்மகன் சுபாவம் ஆனுன்.

## [சந்தேகந் தெளிதல் படலம்]

நிசமா னதுமுக் கியமோ குடத்துள
நீரன் றேவெளி ஈரந்தான்
வசமா அகங்கரம் மறைந்தால் நிசமது
படிந்தால் முக்கிய வகையாகும்
திசையார் திரிசயம் அறியா தேதுயில்
செறியா தேயுடல் தறிபோலே
அசையா தேமதி சமமா கியநிலை
அதுதான் முக்கிய ஆனந்தம்.

(மேற்கூறிய "நிசமானது முக்கியமோ" என்னுந் தலைப்பை யுடைய கவியானது - பஞ்சதசி, யோகானந்தப் பிரகரணம், 96 – 97 – 98 — 99 — 100, ஆகிய சுலோகங்களின் பொருள்களையுடையதாம். இப்பொருள்களை விளக்கங்களுடன், கைவல்லிய நவநீதம் ஸ்ரீ பொன்னம்பல சுவாமிகள் உரை நூலில் காணலாம்.)

---

## ரிபு கீதை

(ஸ்ரீ ரிபு முனிவர் அருளியது)

[நான்கு மகாவாக்கியார்த்தம் உரைக்கும் அத்தியாயம்]

1. "தேகம் முதல் நான்என்னல் துவித விர்த்தி
திகழ்சாட்சி நான்என்னல் சாட்சி விர்த்தி
ஏக பரம் நான்என்னல் அகண்ட விர்த்தி
இம்மூன்று விருத்திகளில் இரண்டைத் தள்ளி
ஆகும்அகண் டாகார விருத்தி தன்னை
அனவரதம் ஆதரவாய் அப்பியா சித்துச்
சோக முறும் சித்தவிகற் பங்கள் தீர்த்துச்
சொன்ன அகண் டேகரச சொரூபம் ஆவாய்."

[பரசொரூப ஞானத்தால் பர சொரூப ஸ்திதியுரைக்கும் அத்தியாயம்]

2. "பிரமம்அகம் அகம்பிரமம் பிரமம் எல்லாம்
பிரமமலா தயல்அணுவும் இல்லை என்றே
உரம்மருவும் உணர்வுதனை உறுவோர் எல்லாம்
உணர்வுருவாம் பிரமமதே ஆவர் அன்றி
ஒருபொழுதும் அயல்ஆகார் உண்மை சொன்னேன்
உரைத்ததில்ஓர் ஐயம்இலை சத்தி யம்தான்
சருவபரி பூரணமாம் சம்பு ஆணை
சத்தியமே சத்தியமே சங்கை இல்லை."

3. "அகம்பிரமம் பிரமம்அகம் அகம்எல் லாம்என்(று)
அகண்டபர ஞானத்தின் அப்யா சத்தைத்
தகும்பிரம ஞானந்தான் திடமாம் மட்டும்
தவிராது சந்ததமும் பழகு வோர்க்கே
அகம்பிரமம் எனும்ஞானம் அகண்டம் ஆன
அவ்வீசன் திருவருளாற் சகசம் ஆகும்
தகும்பிரம ஞானத்தால் சகசம் ஆனால்
தளர்வுதரும் பவபீதி தானே நீங்கும்."

[அகண்டபர பாவனையால் மனோநாசம் செய்யென்றும், அகம் பிரம பாவனையால் அஞ்ஞானாதி நசிக்கும் என்றும் உரைக்கும் அத்தியாயம்]

4. "இருமையிலாச் சுழுத்தியினில் ஏகம் ஆக
இருக்கின்ற ஆன்மாவே தன்னிடத்தில்
மருவியிடும் சத்தியினால் கனவின் கண்ணே
மனம்முதலாய்த் தோற்றியிடும் நீதி யேபோல்
ஒருவடிவாய் உள்ளபரப் பிரமம் தானே
ஒன்றியதன் சத்தியினால் சித்தம் போல்ஆய்ச்
சருவசக சீவபர வடிவம் ஆகச்
சஞ்சலமாம் விவகார தசையில் தோன்றும்."

5. " அகம்பிரமம் பிரமம்அகம் அகம்எல் லாம்என்(று)
அகம்பிரம பாவனேயே அனிசம் செய்யில்
செகம்பரன் நான் ஈதெனவே வேறு வேருய்ச்
செறிகின்ற பேதமதி அனைத்தும் தீரும்
புகன்றவிதம் பேதமதி அனைத்தும் தீரில்
பூரணமாம் பரப்பிரம போதம் தோன்றி
அகண்டபர வடிவாக அமர்வ(து) ஆன
அத்துவித மோட்சநிலை அடைய லாமே."

6. " ஆதலினுல் அனவரதம் இடைவி டாமல்
அகம்பிரம பாவனேயே செய்தே அத்தால்
பேதமதி அனைத்தையுமே இழந்(து)எப் போதும்
பிரிவற்ற பரப்பிரம சொரூபம் ஆவாய்
ஓதியதில் அணுவேனும் ஐயம் இல்லை
உத்தமமாம் சிவன்ஆணை உண்மை சொன்னேம்
ஈதுஅகில சாத்திரமும் இசைக்கும் அர்த்தம்
எம(து) ஈசன் இயம்பியதும் இவ்வர்த் தந்தான்."

[ பிரம தீர்த்தஸ்நானமும், பிரம மந்திரமும் உரைக்கும் அத்தியாயம் ]

7. " புகழும்அகம் பிரமாஸ்மி மந்தி ரந்தான்
பொய்யான பேதம்எலாம் நாசம்செய்யும்
திகழும்அகம் பிரமாஸ்மி மந்தி ரந்தான்
திடசிந்தா ரோகம்எலாம் நாசம் செய்யும்
மகிழும்அகம் பிரமாஸ்மி மந்தி ரந்தான்
மனதில்உள வியாதிஎலாம் நாசம் செய்யும்
பகரும்அகம் பிரமாஸ்மி மந்தி ரந்தான்
பலஆதி வியாதிகளை நாசம் செய்யும்."

[ பிரம தர்ப்பணமும், பிரம ஓமமும் உரைக்கும் அத்தியாயம் ]

8. " அகம்பிரம நிச்சயமே தானம் மற்றும்
அகம்பிரம நிச்சயமே மந்தி ரம்காண்
அகம்பிரம நிச்சயமே தருப்ப ணம்மற்(று)
அகம்பிரம நிச்சயமே ஓமம் மைந்தா
அகம்பிரம நிச்சயமே மற்றும் உள்ள
அறங்கள் எலாம் ஆதலினுல் முமுட்சு ஆனேர்
அகம்பிரம நிச்சயமே இடைவி டாமல்
அனவரதம் ஆதரவாய்ப் பழகல் வேண்டும்."

---

## விவேக சூடாமணி

(ஸ்ரீ சங்கராசாரிய சுவாமிகள் அருளியது)

[சம்சார விருக்ஷத்திற்குப் பீஜாதியைக் கூறல்]

1. விரிபவத் தருவி னுக்கு வீங்கிய தமசே வித்தாம்
மருவுதே கான்ம புத்தி மற்றதின் முளையாம் காமம்
தருவதன் தளிராம் கர்மம் தாக்கிய சலமாம் தேகம்
உரவடிக் கட்டை யாகும் உயிர்களே பணைகள் ஆகும்.

2. பொறிநிரை நுனிகள் ஆகும் புலன்களே மலர்கள் ஆகும்
செறிபல வான கன்மம் செய்ததுன் பங்கள் யாவும்
உறுபலம் அப்ப லத்தை உண்பது சீவன் என்னும்
பறவையே இவித மாகப் பவத்தரு பரவல் ஆகும்.

[ஜன்மாதிப் பிரவாக ஜனகமாகிய அநாத்ம பந்தங் கூறல்]

3. ஓதிய அனுன்ம பந்த மூலஅஞ் ஞான மூலம்
ஈதுதான் அனுதி யேனும் ஏகஞா னத்தில் ஈரும்
சாதுவே சனனம் துஞ்சல் சரைபிணி முதலாம் துன்பம்
யாதுமே இவற்றி னுலே இசைந்ததாம் சீவர்க்(கு) எல்லாம்.

[பந்தம் அஸ்திராதிகளால் நாசமாகாது எனல்]

4. கரணமார் தெளிவி னுலே கறையறத் தீட்டப் பட்ட
அருமையாம் ஞானம் என்னும் அசியினுல் சிதையும் பந்தம்
பரவிய அத்தி ராதிப் படைகள்மற்(று) அனிலம் வன்னி
உரவிய கன்ம கோடி ஒன்றிலும் சிதைய மாட்டா.

[சுதர்ம நிஷ்டையோடு கூடிய பரமாத்ம ஞானத்தால்
சம்சாரம் நாசமாம் எனல்]

5. சுருதியை நம்பி னேர்க்குச் சொன்னதம் கன்ம நிட்டை
மருவிடும் அவற்றி னுலே மன்னிடும் சித்த சுத்தி
பரவும்அச் சுத்தி யாலே பரம்உணர் ஞானம் உண்டாம்
விரிவுறும் பவம் அவற்ருல் வேருடன் நசிக்கும் அன்றே.

[ஆத்மா பஞ்ச கோசத்தால் மறைபட்டுப் பிரகாசியாமை]

6. அன்னியம் இலாத ஆன்மா அடைந்ததன் சத்தி யாலே
மன்னிய அன்னம் ஆதி மயமதாம் பஞ்ச கோசம்
தன்னினுல் மூடப் பட்டுத் தடையற விளங்க வில்லை
முன்னிய பாசிக் கொத்தால் மூடிய வாவி நீர்போல்.

[பஞ்ச கோசத்தின் அபவாதத்தால் ஆத்மா பிரகாசித்தல்]

7. ஓதிய பாசிக் கொத்தை உதகம்நின்(று) ஒதுக்கும் காலை
சாதுவே புருட னுக்குச் சலிலமே தூய்தாய்த் தோன்றித்
தீதுறு தாகம் தாபம் தீர்ப்பதாய்ச் சுகம் அளிக்கும்
ஏதுவாய் உதவு கின்ற இயல்பினை இங்குக் கண்டோம்.

8. இந்தவா பஞ்ச கோசம் இவற்றிளை அபவா தித்தால்
சந்ததா னந்தம் ஆகிச் சாலவும் இலங்கா நின்ற
பெந்தமில் பரமான் மாவும் பிரத்தியக் ஆன்மா ஆக
மைந்தனே தூய்தாய்த் தோன்றி மாசுகம் அளிக்கும் அன்றே.

9. ஆகையால் விவேகி ஆனேன் அடைந்ததன் பந்தம் நீக்க
வேகமாய் ஆன்ம அனுன்ம விவேகமே செய்ய வேண்டும்
ஊகமாம் விவேகத் தாலே உண்மை ஆ னந்த சித்தாய்
ஏகமாம் பரமான் மாவை இங்கறிந்(து) இன்பம் சார்வான்.

10. மருவிய முஞ்சிப் புல்லின் மத்தியுள் ஆணி யைப்போல்
திருசியத் திரளில் நின்றும் திகழ்ந்திடும் தன்ஆன் மாவை
அருமையாம் புத்தி யாலே அசங்கமாய் அசலம் ஆக
மருவிய(து) என்று கண்டு மாசற வகுக்க வேண்டும்.

11. இவ்விதம் வகுத்த பின்னர் இங்குள திருசி யங்கள்
அவ்வித ஆன்மா என்றே அனிசமும் பிரவிலா பித்துத்
தவ்வற ஆன்மா ஆகத் தரணியில் இருப்ப வன்தான்
செவ்விய முத்திப் பேற்றைச் சேர்ந்தவன் அனக மைந்தா.

[அன்னமய கோச விசாரம்]

12 மோதிய மேதை அத்தி மூத்திரம் மலமே யாதி
யாதுமே நிரம்பி மெத்த ஈனமாம் ஊழல் ஆன
தீதுடல் எவ்வி தத்தில் திகழ்ந்திடும் ஆன்மா ஆகும்
ஈதினை உணரும் ஆன்மா இதனின்அன் னியமே என்றும்.

[ஆத்ம ஞானத்தில் அகங்காரத்தின் பிரதிபந்தகத் தன்மையும்,
அதன்நாச அவசியகத்துவமும், அதன் பயனும்]

13. தொந்தமாம் பவத்தைச் செய்யும் துட்டமாம் பிரதி பந்தம்
மைந்தனே அனேக மேனும் மருவிய அவற்றிற்(கு) எல்லாம்
முந்திய விகாரம் ஆக முளைத்திடும் அகங்கா ரந்தான்
சந்ததம் மூலம் அத்தைச் சருவதா ஒழிக்க வேண்டும்.

14. நிருமலப் பிரமா னந்த நிதிமகா வலியைப் பெற்ற
திரிகுணச் சிரங்கள் உற்ற தீஅகங் காரப் பாம்பால்
இருதயப் பூமிக் குள்ளே இருள்உறச் சூழப் பட்டிங்(கு)
ஒருவரும் பெறாத வண்ணம் ஒளித்திடப் பட்ட(து) ஆகும்.

15. தீரனும் ஒருவன் ஞானத் திறமையாம் திகழ்வா ளாலே
கோரமாம் சிரங்கள் மூன்றும் கொய்(து)அகங் காரம் ஆன
சாரமில் சர்ப்பந் தன்னைச் சற்றும்இல் லா(து)அ றுத்துப்
பூரணச் சுகம்செய் விக்கும் புகழ்நிதி புசிக்க வல்லோன்.

16. வெப்பமாம் விடதோ டந்தான் வீங்குதே கத்தில் எம்மட்(டு)
அற்பமும் இருக்கும் அம்மட்(டு) அரோகம்இல் லாது கண்டோம்
அப்படி யோகி யர்க்கும் அகங்கரம் எம்மட்(டு) அம்மட்(டு)
ஒப்பிலா முத்தி சித்தி உள்ளவா(று) உதிப்ப(து) இல்லை.

17. ஆதலால் துய்ப்போன் கண்டத்(து) அடைத்தகண் டகமேபோல
வாதகம் உனக்குச் செய்து வந்தஇவ் அகங்கா ரத்தைக்
கோதிலா ஞான வாளால் கொய்துநன்(று) உன்சொ ரூப
பூதசாம் பிராச்ய இன்பம் புசித்திடு நினைத்த வாறே.

[வாசனைக்குச் சம்சார காரணத்துவமும், அதன் நாச பலமும்]

18. பலபுலச் சிந்தை யால்இப் பகைஅகங் காரத் திற்(கு) இங்(கு)
அலைவுற அவகா சத்தை அற்பமும் அளிக்க ஒண்ணு(து)
உலர்எலு மிச்சை உய்ய ஊற்றிய நீரே போல் இச்
சலஅகங் காரம் உய்யச் சலசிந்தை ஏது அன்றோ.

[ஆத்மநிஷ்டையின் நிலை கூறுதல் வாயிலாக ஆத்ம நிஷ்டையில் பிரமாதம் (மறதி) அடையில் மகா ஹானியெனல்]

19. திருசியத் தோற்றந் தன்னைத் திருக்குமாத் திரமே யாகப்
பிரவிலா பித்து நின்னைப் பிரமமாத் திரமாய்ப் பார்த்திங்(கு)
அரியனே வெளியில் உள்ளில் ஆவது சமாதி பெற்றுக்
கருமபந் தம்வ ரைக்கும் காலம்நீ தள்ளு வாயே.

[ஆத்ம நிஷ்டையில் பிரமாதம் அடைந்து, தேகாத்ம புத்தி செய்யில் சம்சார புத்தி பிராப்தியாம் எனல்]

20. சொருபநிட் டையைஓர் காலும் சொற்பமும் தவிர ஒண்ணு
தரணியில் அந்த நிட்டை தவிர்தலே காலன் என்று
பிரியனே பகவான் ஆன பிரமபுத் திரச்சு சாதர்
பரசநச் சுசாதீ யத்தில் பலவிதம் பகர்ந்தார் அன்றோ.

21. ஆதலாற் சொரூப நிட்டை அன்றியும் தவிர்தல் ஞானிக்(கு)
ஏதம்ஆம் அனர்த்தம் ஆகும் ஏதெனில் தவிர்த லாலே
சாதம்ஆம் மோகம் அத்தால் சனித்திடும் அகந்தை அத்தால்
கோததாம் பந்தம் உண்டாம் கூடிடும் அவற்ருல் துன்பம்.

22. பொருவிலா ஞானி யேனும் புலத்தின்நேர் சென்றோன் தன்னைத்
தரணியிற் சொருப நிட்டை தவிர்தல்ஆம் மறதி புந்திப்
புரைகளால் அலைக்கும் சோர புருடனைச் சோர மா(து) இங்(கு)
அரியனே விவித மாக அலைத்திடும் நீதி யேபோல்.

23. தீரனும் ஞானி யேனும் திருசியம் சென்றோன் தன்னைக்
கோரஆ வரண சத்தி குறைவுற மறைக்கும் அன்றே
நீரின்உட் பாசிக் கொத்தை நீக்கினும் கணத்தில் அந்த
வாரியை அதுதான் மற்றும் வழுவுற மறைப்ப தேபோல்.

[நிர்விகற்ப சமாதியால் சம்சார துக்க நிவிர்த்தி வாயிலாகச் சர்வாத்ம சித்தியாம் எனல்]

24. கிரியைகள் இயாவும் விட்டுக் கீடகம் பிரம ரத்தை
மருவியே தியானம் செய்து மற்(று) அதே ஆகு மாபோல்
ஒருமையாம் நிட்டை யாலே உண்மையாம் பிரமம் தன்னைச்
சருவதாத் தியானிப் போனும் சத்தியம் பிரமம் ஆவன்.

25. மிகவுமே நுண்மை ஆன மெய்ப்பரப் பிரமந் தன்னைத்
தகவிலாத் தூல திட்டி தன்னினால் எவரும் காணார்
நிகழ்மதி நுண்மை யுள்ள நிமலரே சமாதி யாலே
மிகவுமே சூக்க மான விருத்தியாம் கண்ணால் காண்பார்.

26. மெத்தவும் புடபா கத்தால் மேவிய மலத்தை விட்டுச்
சுத்தமாம் தன்கு ணத்தைச் சொர்ணமே வுவதே போலச்
சித்தமும் தியானத் தாலே சேர்ந்தமுக் குணம லத்தைச்
சுத்தமாய் விட்டுத் தன்னின் சுபாவமாம் சொரூபம் மேவும்.

27. இடைவிடாத் தியானத் தாலே இருதயம் சுத்தம் ஆகித்
திடமுறப் பிரமத் தின்கண் தியங்கிடா(து) அடங்கும் எப்போ(து)
அடர்மிகும் அகண்டா நந்த அனுபவ ஏது ஆன
சடம்இலா நிருவி கற்ப சமாதிஅப் பொழுதே உண்டாம்.

28. ஆனஅச் சமாதி யாலே அகிலவா சனைமு டிச்சும்
போனதாம் விவிதம் ஆகப் பொருந்திய கன்மம் பொன்றும்
ஏனைஉள் வெளியில் எங்கும் என்றும்ஓர் முயற்சி இன்றி
ஊனமில் சொரூபத் தோற்றம் ஒருமையாய் ஒளிரா நிற்கும்.

29. பலிப்பினால் பார்க்கும் போது பாங்கான சிரவ ணத்தின்
சலிப்பிலா மனனம் தானே சதகுணம் மேலாம் அத்தின்
இலைப்பிலா நிதித்தி யாசம் இலக்கமாம் குணம்மேல் ஆகும்
அலுப்பிலா நிருவி கற்பம் அளவிலாப் பலன்உ டைத்தாம்.

30. பிரிவிலாச் சமாதி யாலே பிரதிபந் தங்கள் இன்றி
ஒருமையாய்ப் பிரம ரூபம் உணரலாம் அஃதி லாதேல்
சருவதா மனவி ருத்தி சஞ்சலம் ஆத லாலே
விரிவுற விரோதம் ஆன விருத்தியோ டேக லக்கும்.

[சீவன்முத்தனது பயன் கூறல்]

31. தத்துவ ஞானி யாகித் தகைமையுள் இயோகி ஆன
சுத்தமாம் சீவன் முத்தன் தொடர்பயன் தான்ஏ(து) என்னில்
புத்திர புந்தி யாலே பூரண ஆனந் தத்தை
நித்தமும் உட்பு றத்து நிகழவே அனுப விப்பன்.

[வைராக்கியாதி (வைராக்கியம், ஞானம், உபரதி) பலன்]

32. மெத்தவும் நிவிர்த்தி என்ன மேலான திருப்தி என்ன
நித்தமும் தானே தோன்றும் நிகரில்ஆ னந்தம் என்ன
எத்திறத் துன்பம் நேரே எய்தினும் அபயம் என்ன
இத்தனை வகையும் வித்தை ஈன்றநற் பயனே ஆகும்.

---

## பஞ்சதசி - திருப்தி தீபம்

(ஸ்ரீ வித்தியாரண்ணிய சுவாமிகள் அருளியது)

[பிருக தாரண்ய உபநிஷத்தின் கண்ணுள்ள சுலோகத்தை முதலில் கூறுகின்றூர்]

ஆத்மாநஞ் சேத்விஜா நீயாதய மஸ்மீதி புருஷ : |
கிமிச்சந்கஸ்ய காமாய சரீரமநுஸஞ் ஜ்வரேத் ‖

(இதற்குத் தமிழ்க் கவி – இந்தப்புருடன் தான் எனவே தன்னை உணர்ந்தால், எந்தப் பொருள் இச்சித்துளவன் இன்புக்கு உடல் வேவுஆம்)

(இதன் பொருள்) புருஷனுகிய ஜீவன் "ஆத்மாவை இதுயானு யிருக்கிறேன்" என்று அறிவானுயின், அப்போது எந்த (இல்லாத) போக்கிய விஷயத்தை இச்சித்து, எந்த (இல்லாத) போக்தாவின் (இல்லாத) போகத்தின் பொருட்டுச் சரீரத்தைப் பின்பற்றித் தாபப் படுவன்? (தாபப்படமாட்டான்). (என்றவாறு)

ஜீவன்முக்தி விவேகம் (ஸ்ரீ வித்தியாரண்ணிய சுவாமிகள் அருளியது) ஜீவன் முக்திக்குப் பிரயோஜனப் பிரகரணம் (ஓர் பகுதியின் சுருக்கம்)

[முன்னுரை :– 1. ஜீவன் முக்தி யாது? 2. அதில் பிரமாணம் யாது? 3. அதன் சித்தி எவ்வாறு உண்டாம்? என்னும் இந்த மூன்று பிரசினங்கட்கும் உத்தரம் நிரூபிக்கப்பட்டது. அந்தச் சீவன் முத்தியின் சித்தியால் பிரயோசனம் யாது? என்னும் இந்த நான்காவது பிரசினத்தின் உத்தரம் இப்போது நிரூபிக்கப்படுகிறது.]

ஜீவன் முக்திக்கு 1. ஞான ரக்ஷை, 2. தவம், 3. விசம்வாதமில்லாமை (இகழ்ச்சியின்மை), 4. துக்க நாசம், 5. சுகாவிற்பாவம் என்பனவான ஐந்து பிரயோஜனங்களாம். இதில் சங்கை? மகா வாக்கியப் பிரமாணத்தினுல் உண்டான தத்துவ ஞானத்திற்கு இரக்ஷையை அபேக்ஷிக்கும்படியான பாதப் பிரசங்கம் (கெடுதல் சொல்லும்படியான நிலை) என்பது யாது எனில்? உத்தரம் – ஆத்மப் பிரம்மத்தில், சித்தவிசிராந்தி இல்லாதபோது சந்தேக விபரீதங்கள் பொருந்தக் கூடும். இந்தச் சந்தேக விபரீதங்களால் தத்துவ ஞானமானது அதன் பலனுகிய மோக்ஷத்திற்கு ஏதுவாகாமற் போம். இதுவே பாதப் பிரசங்கமாம். ஆகவே ஆத்மப் பிரம்மத்தின் கண்ணே சித்த விசிராந்தி (சித்த அடக்கம்) இல்லாதவனுக்கு, சுகருக்குத் திடஞானம் உண்டாவதற்குமுன் சித்த விசிராந்தியில்லா

ததால் சந்தேகமுண்டானதைப் போலவும், நிதாகருக்குத் திட ஞானம் உண்டாவதற்குமுன் சித்த விசிராந்தி யில்லாததால் விபரீத முண்டானதைப் போலவும் சந்தேக விபரீதங்கள் உண்டாகும். அதுவும் அஞ்ஞானத்தினைப்போல் மோக்ஷத்திற்குப் பிரதிபந்தக மாம். ஆதலால் முமுக்ஷுக்கள் ஆத்மப் பிரம்மத்தில் சித்த விசிராந்தி யடைந்து அதனுல் ஞான ரக்ஷை முதலிய பலன்களை யடைந்து மோக்ஷத்தை யடைய வேண்டியதாம்.

மேற்கூறிய ஆத்மப் பிரம்மத்தில் சித்த விசிராந்தி இல்லாத போது, சந்தேக விபரீதங்கள் உண்டாய்த் தத்துவ ஞானமானது அதன்பலனுகிய மோக்ஷத்திற்கு ஏதுவாகாமல் போம். என்னும் வசனத்திற்கு உரிய கவி வருமாறு.

வேதமா வாக்கி யத்தால் விளங்கினும் ஆன்ம ஞானம்
ஏதம்இல் சீவன் முத்தி இலானுக்கு மனத்தின் நாசம்
தீதுஅற இலாமை யாலே சேரும்அச் சமுச யாதி
மேதகு ஞானத் துக்கு மேவவை விரோதம் ஆகும்.

என்பதாம். இவ்வாறே, கைவல்லிய நவநீதம்:—

தடைஎவை எனில்அஞ் ஞான சந்தேக விபரீ தங்கள்
படர்செயும் இந்த மூன்றும் பலசன்மப் பழக்கத் தாலே
உடன்உடன் வரும்வந் தக்கால் உயர்ஞானம் கெடும்இ வற்றைத்
திடமுடன் கெடுப்பாய் கேட்டல் சிந்தித்தல் தெளித லாலே.

என்னும் கவி கூறுவதும் அறியத் தக்கதாம்.

---

## ஞானலோகம் என்னும் யுக்தி சாகரம்

(ஸ்ரீ திருப்பதி சுவாமிகள் அருளியது)

அகண்ட விருத்திநிலை ஆம்கற் பகம்தான்
மிகும்புதுமைச் சாட்சி விருத்தி — தகுங்காம
தேனு விசாரச் செயலில் திகழ்ஞானம்
மானம்உறு சிந்தா மணி.

(இதன் பொருள்) அகண்டாகார விருத்தியின் நிலைமை கற்பக விருட்சமாம்; மிகுந்த அற்புதமாகிய சாட்சி விருத்தி தகுதியுடைய காமதேனுவாம்; விசாரச் செய்கையால் விளங்குகிற ஞானம் பெருமை பொருந்திய சிந்தாமணியாம்; (இவற்றையுடையவனே கவலையற்ற சுகந்தரும் தனமுடையவனாகிய தன்னியன் ஆம்.) (என்றவாறு)

தன்னைஅறி யாமை தனிக்கொலைமெய் யான்என்னல்
மன்னுகள(வு) உன்னல் மதுபானம் — என்ன(து) எனல்
காமம் பிறிது(உ)ளதாக் காணல் சினம் இவைகள்
தாம்ஐந்து மாபா தகம்.

(இதன் பொருள்) ஆத்மப்பிரம்மமாகிய தன்னை அறியாமை ஒப்பற்ற கொலை ஆம்; சரீரத்தை யான் என்னல் பெரிய களவு ஆம்; (நாமரூபங்களைச்) சங்கற்பித்தல் கள்குடி ஆம்; இது என்னுடையது என்று நினைத்தல் காமம் ஆம்; (ஆத்மப் பிரம்மத்திற்கு) அன்னியமானவைகள் இருப்பதாக அறிதல் கோபம் ஆம்; இவைகளே (சூட்சுமமாக இருக்கும்) பஞ்சமாபாதகங்கள் ஆகும். (என்றவாறு)

மாதர்அவாச் சூரு வளிதான் பரஞான
பூதரம்ஆய் நிற்கும் புனிதர்தமை — யாது செயும்
ஊன்உடல்மட்(டு) ஆம்சிற் று(உ)யிர்ப்பஞ் சினைஉழல்வித்(து)
ஈனம்உறத் தேய்ப்ப(து) அலாது.

(இதன் பொருள்) பெண்களின் இச்சை என்னும் சூறைக் காற்றானது, மாமிசமயமான சரீர மாத்திரமாய் இருக்கும் அற்ப ஜீவனாகிய பஞ்சை அலைத்துக் குறைவுபடக் கெடுப்பதல்லாது, மேலான ஞானம் என்கிற மலையாய் நிலைத்திருக்கும் சீவன் முக்தர்களாகிய பரிசுத்தர்களை என்ன செய்யும்; எதுவும் செய்யாது. (என்றவாறு)

யான்இன்று தானே என (து) இன்று தன்னதே
தான்என்றல் ஈசன் சரண்.

(இதன் பொருள்) நான் என்பது இல்லை; தான் ஆகிய சிவமே உள்ளது; எனது என்பதும் இல்லை; எல்லாம் அந்தச் சிவத்தின் சக்தியேதான்; என்னும் நிச்சயமே, ஈசனுக்கு அடைக்கலம் ஆம்.

---

# பிரமானுபூதி விளக்கம்

(ஸ்ரீ குமார தேவ சுவாமிகள் அருளியது)

1. பிரமானு பூதியினைப் பெரியநா யகியெனக்குத்
திரமாக அருளியவா செப்புவேன் அவளருளால்.

2. அவளருளி னாலே அனுபூதி யின்விளக்கம்
இவனுரைக்கேன் அந்நிலையை எய்திடுவோ ரேகளிக்க.

3. தனைத்தவிர வேயொன்றைத் தான்வேறாய்க் கண்டுவிடில்
பினைச்சென்மம் நீங்காது பிரமானு பவமலவே.

4. தன்னைவிடவே யொன்றுந் தானில்லாத் தன்னிடத்தில்
தன்னினை வினாலே சகம்போலத் தோன்றிடுமே.

5. மந்தவிரு ளிற்கயிறு மாசுணம் போற் றோன்றுதலின்
இந்தவுல கென்னிடத்தில் இலகும்ஆ ரோபிதமாய்.

6. பழுதையினின் றோர்சத்தி பாம்புபோல் தோன்றுதற்குப்
பழுதையினுண் டதைப்போலப் பரத்தினுமுண் டோர்சத்தி.

7. சூனியஞ்சித் துப்பிரமம் சுத்தசிவம் பரம்என்று
தானிகழ்தல் வேறில்லை தனக்கே பரியாயம்.

8. உலகமுயிர் பரமென்று உரைத்திடும் மூவகைப்பொருளும்
இலகவே யானாக என்னனுபூ தியிற்கண்டேன்.

9. எனைத்தவிர வேறொன்றும் இல்லையெனக் கண்டளவில்
பினைத்தவிப்பு நீங்கிப் பிரமமா யேயிருந்தேன்.

10. செகமதையுந் தான் விழுங்கிச் சீவனையும் உள்வாங்கி
அகமதுவும் புறமும்இலா அகண்டமாய் நின்றனமே.

11. தெருள்விழியோர் துணிவிதெனத் தேர்ந்தனுபூ தியிற்கொள்வர்
மருள்விழியோர் திரிவில்இதை மாயாவா தமதென்பர்.

## ஸ்ரீ பெரியநாயகியம்மன் ஞானோபதேசப் பதிகம்

*[ஸ்ரீ குமாரதேவ சுவாமிகள் தமக்கு விருத்தாசலம், ஸ்ரீ பெரியநாயகியம்மன் தத்துவமசி மகாவாக்கிய ஞான உபதேசம் கூறியதைக் கூறுகின்றார்]*

**எழுசீர் ஆசிரிய விருத்தம்**

விரிவுறும் உருவ நாமம தகற்றின்
விடயங்கள் விளங்குறா விதனால்
மருவுறு பொறிபோம் பொறியறக் கரணம்
மாய்ந்துறும் கரணம்மாய் தலினால்
புருடன்முன் னேழும் சுத்தமோர் ஐந்தும்
போம்இதால் சச்சிதா னந்தம்
கிரியையற் றிலங்கும் என்றனள் விருத்த
கிரியமர் பெரியநா யகியே. 1




உளப்படும் உருவம் நாமம தகற்றின்
உள்ளசற் சிற்சுகம் தோன்றும்
வளப்படும் இதனால் உலகுகண் ணாடி
வரும்நிழல் ஆம்நிழல் மறிந்தால்
விளக்குறும் ஞான வெளியதாம் இதனின்
விளையும் இன்(பு) எனவெனக் கிசைத்தாள்
கிளக்குறு தவத்தோர் தரித்துரை விருத்த
கிரியமர் பெரியநா யகியே. 2

பழுதையென் றுணரில் தன்முனர்த் தோன்றும்
பாம்பும்அப் பழுதையாம் அதுபோல்
முழுதுணர் அறிவாம் தன்னையே காணின்
முரண்உறு சராசரம் எவையும்
எழுதரும் அறிவாய் விளங்குமென்(று) இசைத்தாள்
எழுபவம் துடைத்(து) எனை அளித்த
கெழுமணி முத்த நதிசெறி விருத்த
கிரியமர் பெரியநா யகியே. 3

சொருபமே தான்என்(று) உணர்தரில் பரனும்
துகளுறு சீவனும் சகமும்
மருவுதன் நினைவில் எழுந்தமித் தைக(ள்)ஆம்
வந்திடு பந்தம்வீ(டு) இலவாம்
ஒருவுயிர் தான்என்(று) உணரி(ல்) அம்மூன்றும்
உளபந்தம் வீடு(ம்) உண்(டு) என்றாள்
கிரிதவப் பயனாய் வரும்ஒரு விருத்த
கிரியமர் பெரியநா யகியே. 4

அறிபொருள் அறிவோன் அறிவினைக் கொடுப்போன்
ஆனமுப் பொருளும் ஓர்விடயம்
பொறியுறப் பிடித்தால் உள இதை விடுத்(து) ஓர்
பொருளைநா டுதல்முனர் இடையே
பிறிவறத் தோன்றும் சொரூப(ம்) இந் நிலையில்
பேசு(ம்) முப் பொருள்களும் இலவாம்
கிறியற அறிதி என்றனள் விருத்த
கிரியமர் பெரியநா யகியே. 5

அரவிலை பழுதை உணர்ந்தவர்க்(கு) அதுபோல்
அகிலமெய்ப் பொருளினை உணர்ந்தோர்க்(கு)
ஒருவுரு(து) இருத்தல் எனைஎனில் கானல்
உறுசலம் இலைஎன உணர்ந்தும்
மருவலின் நா நா விகார(ம்) ஏ(து) என்னின்
மலிகன வினில் உறும் என்றாள்
கிருது செய் மறையோர் பரவிய விருத்த
கிரியமர் பெரியநா யகியே. 6

தடத்தில்மற் றதனில் தயங்குபல் கடத்தில்
சாயையும் சாயையில் லதுமாய்த்
திடத்தொடும் விளங்கும் விசும்புபோல் ஈசன்
சீவன்இங்(கு) இருவர்சாட் சிகளாம்
இடத்துறும் பிணையில் தோன்றுறும் சிவம் இங்(கு)
இருவர்சாட் சிகளும் ஒன்(று) என்றாள்
கிடைத்தநன் னிதியாய் எனக்குறும் விருத்த
கிரியமர் பெரியநா யகியே. 7

ஆருயிர் தானும் அவன்மனம் தைச(த)
அகங்கரத்(து) உதித்தது ஆகும்
பேருயிர் சாட்சி யானவன் மனமோ
பின்னையாம் ஆதலால் அவற்குக்
கூருறும் உலகம் மயக்கமாம் இவற்குக்
குறித்ததன் லீலையாம் என்றாள்
கீரனை அளித்தோர்க்(கு) உவந்ததாய் விருத்த
கிரியமர் பெரியநா யகியே. 8

ஓதுரு நாமம் அகற்றிடில் தோன்றும்
உள்ளசற் சிற்சுகம் இதுவே
தீதறு சீவ சாட்சியிங்(கு) இதனைத்
*தெருந்திடும் சீவனும் இதுவாம்
ஏத(ம்) ஒன்(று) இல்லாப் பிரமமாம் என்(று) என்
இருள்அற அருள்புரிந்(து) அளித்தாள்
கேத(ம்) இல் தவத்தோர் சூழ்தரும் விருத்த
கிரியமர் பெரியநா யகியே. 9

---

* தெருந்திடும் – தெளிந்திடும்

எஞ்சுறும் உளத்தோ(டு) என்னையார் என்றே
இரங்கியே திரிந்துழல் வேனை
மஞ்சு(உ) றழ் காத்துக் கன்னனைக் குந்தி
மகனென உணர்த்துதல் * கடுப்ப
அஞ்ச(ல்) என்(று) அழைத்து ** நீ அது ஆகும்
ஐய(ம்) இன்(று) என்னவே அளித்தாள்
கிஞ்சுக வாயால் உஞ்சிட விருத்த
கிரியமர் பெரியநாயகியே.

---

## திருவாசகம்

(ஸ்ரீ மாணிக்க வாசக சுவாமிகள் அருளியது.)

### திருத்தெள்ளேணம்

அவமாய தேவர் அவகதியில் அழுந்தாமே
பவமாயம் காத்துஎன்னை ஆண்டுகொண்ட பரஞ்சோதி
நவமாய செஞ்சுடர் நல்குதலும் நாம்ஒழிந்து
சிவமான வாபாடித் தெள்ளேணம் கொட்டாமோ.

## கந்தர் அனுபூதி

(ஸ்ரீ அருணகிரிநாதர் அருளியது)

ஆனா அமுதே அயில்வேல் அரசே
ஞானா கரனே நவிலத் தகுமோ
யானா கியஎன் னைவிழுங் கிவெறுந்
தானாய் நிலைநின் றதுதற் பரமே.

அறிவொன் றறநின்(று) அறிவார் அறிவில்
பிறிவொன் றறநின் றபிரான் அலையோ
செறிவொன் றறவந்(து) இருளே சிதைய
வெறிவென் றவரோ(டு) உறும்வே லவனே.

## கந்தர்கலிவெண்பா

(ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் அருளியது)

யான் எனது என்று அற்ற இடமே திருவடியாக
மோன பரானந்தம் முடியாக.

---

* கடுப்ப – போல. ** நீ அது – அதுநீ என்னும் "தத்துவம் அசி" மகாவாக்கிய உபதேசம். இந்தத் "தத்துவம் அசி" மகா வாக்கியம் சாமவேதம் – சாந்தோக்கிய உபநிஷத்துக் கூறும் உபதேச மகா வாக்கியம் ஆம்.

## காசிக் கலம்பகம்

(ஸ்ரீ குமரகுருபர சுவாமிகள் அருளியது)

தான் என்றவர்முன் ஒளித்தோடித் தன்னை இழந்தவர்முன்
யான் என்று சென்றிடும் காசிப்பிரான்.

## அஞ்ஞவதைப் பரணி

(ஸ்ரீ தத்துவராய சுவாமிகள் அருளியது)

### சும்முலக்கை

நம்மாலே காண்கின்ற நாமும்போய் நாம்ஆகிச்
சும்மாவே இருந்தனம்காண் சும்மேலோ சும்முலக்காய்.

## பரமானந்த தீபம்

ஸ்ரீ அனுகூல மாமுனிவர் அருளியது

1. ஆணவகா மியமாயை மலமோர் மூன்றும்
அடுத்தறிவைக் கெடுக்குமதை அடுக்கப் போமோ
சாணளவுக்(கு) ஏறிவந்தால் முழத்துக்(கு) அப்பால்
தாழ்த்திவிட்டுத் தனக்காளாய்ப் படுத்திக் கொள்ளும்
வாணிபர்செய் தொழிலதுபோல் கருத்தால் நோக்கி
மலம்மூன்றும் பொசிப்பறவே நிற்பாய் ஆகில்
ஆணவமும் மலம்அகலும் பரமா னந்த
அமுதருந்தி வாழ்ந்துசுகித்(து) இருக்க லாமே.

2. சொற்பனத்தில் மலடிபிள்ளைப் பெற்றாற் போலும்
சோரன்என்று கட்டையைக்கண்(டு) ஒளித்தாற் போலும்
சற்பம்என்று பழுதையைக்கண்(டு) அயர்ந்தாற் போலும்
சடத்தைமெய்என்(று) அறிவிழந்தோர் பிறந்தார் ஆகும்
சொற்பனங்கண்(டு) எழுந்துபொய்என்(று) அறிந்தாற் போலும்
சோரன்என்றேன் கட்டைஇதென்(று) அறிந்தாற் போலும்
சற்பம்என்றேன் பழுதைஇதென்(று) அறிந்தாற் போலும்
சடத்தைமித்தை என்றறிந்தோன் ஞானி ஆமே.

3. ஆங்காரப் புனத்தைவெட்டிச் சுட்டு நீற்றி
ஆட்கொண்ட குருபதத்தை நிதமும் போற்றி
நீங்காமல் நாசிநுனி நடுவில் நோக்கி
நிட்டைபுரிந்(து) அறிவுருவாய் நிற்பாய் ஆகில்
தேங்காத ஆனந்த வெள்ளம் தேங்கும்
தெள்ளமுதம் உண்டாற்போல் உள்ளம் பொங்கும்
தீங்கான பிறவிவிடாய் உடனே நீங்கும்
சித்தம்என்று நூற்பலவும் செப்பும்தானே.

---

## சொரூபசாரம்

(ஸ்ரீ சொரூபானந்த சுவாமிகள் அருளியது)

1. சந்ததமும் நீங்காத் தனியரசு பெற்ருேமே
தொந்தச் சுகாசுகமும் சுட்டோமே — சிந்தனையை
வாட்டிய தேகாதி வனவாசம் விட்டோமே
வீட்டிற் குடிபுகுந்தோ மே.

2. முக்கனியும் பாற்சோறும் முன்பிருக்க நாயருந்திக்
கக்கியசோற் றுக்குக் கருதுவார் — எக்கலைக்கும்
எல்லாப் பொருட்கும் இரும்பொருள்யாம் என்னுமல்
வல்லார்க்(கு) அடிமைபுகு வார்.

3. தன்னை அறியாமல் தானே தனைத்தேடல்
என்ன புதுமைஇதை என்சொல்வேன் — மன்னுலகில்
தண்ணீரில் நின்றுகொண்டு தாகம் தணியார்போல்
எண்ணீர்மற்(று) ஏதுரைப்போம் யாம்.

4. என்னைநான் கண்டபடி இப்புவியில் எல்லோரும்
தன்னையே காணத் தகும்காணும் — சொன்னேன்
ஒளிநாட்ட மோடுமனம் உள்நாட்டம் பெற்று
வெளிநாட்டம் ஆகா விடின்.

5. சித்துருவம் ஆகிச் செகசாட்சி தாம்ஆன
முத்தரைக் காமாதி முனியாவே — சித்தத்தில்
இங்குஅற்ப வாசனைகள் எல்லாம் எடுத்(து) அருந்திச்
சங்கற்பம் இல்லாத தால்.

---

## ஒழிவிலொடுக்கம்

**ஸ்ரீ கண்ணுடைய வள்ளலார் அருளியது:**
**பொதுவில் உபதேசம்.**

[தன்னைத்தான் உள்ளபடி அறிவது எங்ஙனம் எனின் மேற் கூறுகின்ருர்.]

1. தம்மால் அறிந்த(து) எல்லாம் தாம்அல்ல என்(று) உரைத்தால்
சும்மா இருப்பதுவாய்த் தோன்றுதோ — விம்மி
அரிந்ததலை வாய்அடங்கும் அவ்வளவே அல்லால்
தெரிந்திடுமோ நீயே தெளி.

**யோகக் கழற்றி**

2. மணிப்பாம்(பு) இருளில் மறைந்(து) இருக்கத் தேடும்
கணக்காம்தற் போதத்தைக் காட்டி — உணர்த்துகினும்
நீரில் கிணறும் நிழல்(உ)யுத்த மும்போல்ஆம்
ஆர்இத்தை நீக்கிஇருப் பார்.

[ஆயின் ஒன்றையும் கருதாது சும்மா நிற்பின் சிவத்தை அடைவது எங்ஙனம் எனின், மேற் கூறுகின்றார்]

3 இருட்கே வலத்(து)இன்(று) எழுப்பிஎதி ரிட்ட
மருட்கே வலசகலம் மாற்றித் — திரிச்சுடர்போல்
தன்அறிவு தின்னிக்குத் தான்உணவாய்ப் போவ(து)அல்லால்
உன்னுதலே ஒட்டுதல்கா ணும்.

இத்திருவெண்பாவால், சுட்டற்று இருந்தாலன்றிச் சிவத்தைப் பெறக்கூடாது என்பதும், அங்ஙனம் நிற்பின் சிவம் தானே விழுங்கிக்கொள்ளும் என்பதும், அறிவித்தவாறு காண்க.

---

## ஸ்ரீ சிவஞான வள்ளலார் சாத்திரம், உபதேச மாலை

**ஸ்ரீ தக்ஷிணமூர்த்தி வணக்கம்.**

1. சீவ பர(ம்)இரண்டும் தேரு(ம்)இடத்(து) ஏக(ம்)என்று
மேவியசின் முத்திரைகொள் மென்கரத்தால் — ஓவில்
வழக்கறுத்தான் பல்சமய வாதிகளே காண்மின்
மழுக்கரத்தில் ஏந்தியஎம் மான்.

ஷை சாத்திரம், ஞான விளக்கம்.

2. சத்தும் அசத்தும் சதசத்தும் நீயல்ல
சுத்தசிவம் நீஎன்று சொல்லினன் — மொய்த்தெழுந்த
கல்லாலின் கீழ்இருந்து காணகதி நால்வர்க்கும்
சொல்லாமல் சொன்ன துரை.

3. அறிவால் அறிந்தஅது எல்லாம் அறி(வு)அன்று
அறியா மையு(ம்)அறிவே அன்றால் — அறியா
அறிவாய் இருந்தும் அறி(வு)இலேன் என்னும்
அறி(வு)இலர்க்கு ஞான(ம்)அரி(து) ஆம்.

4. ஆறுஆறு தத்துவத்துக்(கு) அப்பால் அதீதத்தே
வேறாகத் தம்மை விசாரித்தும் — கூறாக
ஆநந்தம் தா(ம்)என்(று) அறியா அறிவிலிகள்
ஆநந்தம் தேடிஅலை யும்.

ஷை சாத்திரம் ஞானவிளக்கத்தில், ஈசுரபத்தி.

5. ஈசன்வே(று) யான்வே(று)என்(று) எண்ணும் கடையினங்கள்
ஈச(ன்)அடி என்னும் இடையினங்கள் – ஈசனே
ஆனே(ம்)என்(று) ஏமாக்கும் ஆயில் தலையினங்கள்
ஆனத மாண அறி.

ஷை சாத்திரம் ஞான விளக்கத்தில், சற்குரு தரிசனம்.

6. உள்ள(ம்) எனும் ஆனந்த ஓங்கன் மிசைஏறி
வெள்ள வெளிக்குள்ளே விளையாடும் – பிள்ளை
உலக(ம்) எனும் சேரிக்(கு) ஒருக்காலும் வாரார்
கலகம் விளையு(ம்) எனக் கண்டு.

ஷை சாத்திரம், நிராமய அந்தாதி

7. மெய்யைப்பொய் என்றான் வெளியை நல்ல வீ(டு) என்றான்
சைவத் துரைகாழிச் சம்பந்தன் – ஐய(ம்)அற
நின்போதம் போ(ம்)இடத்தே நீயே சிவ(ம்) என்றான்
என்போதத்(து) உள்ளே இருந்து.

8. இருந்த படியிருந்தால் ஈசனுருத் தோன்றும்
பொருந்துமலம் இம்மையிலே பொன்றும் – இருந்தபடி
ஏதென்றங்(கு) உன்னி இரண்டாட்டு வார்க்(கு)உண்டோ
போத(ம்) உண்ட பிள்ளை புகல்.

9. புகலிக்(கு) அரசேஉன் பொய்ப்போதம் போனல்
சகல(ம்)அறும் கேவலமும் சாயும் – அகலாத
நல்வினையும் தீவினையும் நட்டமாம் என்று(உ)ரைத்தும்
ஒல்காளன் போத ஒழுக்கம்.

10. போத ஒழுக்க(ம்)என்று பொன்றுங்கொல் சம்பந்த
நாதனே உள்ளபடி நாட்டுவாய் - பேதாய்
அறிந்தஅறி(வு) எல்லாம்நாம் அன்(று)அறிந்திட்(டு) ஆங்கே
செறிந்(த)அறிவாய் நிற்கி(ல்)இறும் தேர்.

---

## பிருகதாரண்ணிய உபநிடதம்

அத்தியாயம் 2, பிராம்மணம் 4, சுலோகம் 6.

ஆத்மாவுக்கு (தனக்கு) அன்னியனாகப் பிராம்மணனை எவன் கருதுகிறானோ அவனைப் பிராம்மணன் தள்ளிவிடுவான்; ஆத்மாவுக்கு அன்னியனாக க்ஷத்திரியனை எவன் கருதுகிறானோ அவனை க்ஷத்திரியன் தள்ளிவிடுவான்; ஆத்மாவுக்கு அன்னியமாக உலகங்களை எவன் கருதுகிறானோ அவனை உலகங்கள் தள்ளிவிடும்; ஆத்மாவுக்கு அன்னியமாக தேவர்களை எவன் கருதுகிறானோ அவனைத் தேவர்கள்

தள்ளிவிடுவார்கள்; ஆத்மாவுக்கு அன்னியமாகப் பூதங்களை எவன் கருதுகிருனே அவனைப் பூதங்கள் தள்ளிவிடும்; ஆத்மாவுக்கு அன்னியமாக அனைத்தையும் எவன் கருதுகிருனே அவனை அனைத்துந் தள்ளிவிடும்; இந்தப் பிராம்மணனும் க்ஷத்திரியனும் இவ்வுலகங்களும் தேவர்களும் பூதங்களும் இவ்வனைத்தும் (அயமாத்மா என்று கூறப்பட்ட) ஆத்மாவே.

## ஸ்ரீ பகவத்கீதையின் சாராம்சம்

(ஸ்ரீ சுவாமி துரியானந்தர் அருளியது)

ஒருவன் கிழக்காகப் போய்க்கொண்டிருந்தால், மேற்கானது நீங்கிக்கொண்டே இருக்கும்; அதைப் போலக் கடவுளின் சொரூபத்தில் சரணுகதி அடைந்துகொண்டே இருந்தால், மனதின் ஆசாபாசத் துன்பங்கள் வேறு எவ்வித முயற்சியும் இல்லாமலே தாமாகவே நீங்கிவிடும்; இது மனே துக்கங்கள் சுலபமாக நீங்குவதற்கு உரிய இரகசிய விஷயமாம்.

என்பவையும் இவைபோன்ற பிறவும் ஆம்.

---

20ஆம் பக்கத்தில் "(*2) அக்கணமே காமம், இறப்பு, பிறப்பு முதலிய சர்வதுக்க நிவிர்த்தி பரமானந்தப் பிராப்திவடிவ மோக்ஷம் (பேரின்பவிடு பிரத்தியக்ஷ பலமாக அடையப்படும்". என்று கூறியதற்கு உதாரணம்.

பஞ்சதசி, சித்திரதீபம் 259ஆம் சுலோகம், ஆத்மப்பிரம்ம தத்துவ ஞானத்தின் பலத்தைப் பிரதிபாதிக்கும் கடவல்லி சுருதி.

சுலோகம் :—

யதா ஸர்வே ப்ரமுச்யந்தே காமா யேऽஸ்ய ஹ்ருதி ஸ்ரிதா : |
(அத மர்த்யோऽம்ருதோ பவத்யத்ர ப்ரஹ்ம ஸமஸ்நுதே ॥ )
இதி ஸ்ரௌதம் பலம் த்ருஷ்டம் நேதி சேத் த்ருஷ்டமேவ தத் ॥

(இதன் பொருள்) எப்போது இந்த முமுக்ஷுவின் இருதயத்தில் ஆசிரயித்துள்ள காமங்கள் (அதாவது அகங்காரத்தையும் சிதாத்மாவையும் அஞ்ஞானத்தால் ஒன்றுபடுத்திய தாதாத்மிய அத்தியாசமென்னும் அந்நியோந்நிய அத்தியாசமாகிய காரணத்தால் ஆகின்ற, எனக்கு இது உண்டாகுக, எனக்கு இது உண்டாகுக என்னும் ஆசைகள்) யாவும் நீங்குகின்றனவோ (அதாவது ஆன்மப்பிரம்ம ஞானத்தால், அஞ்ஞான நிவிர்த்தி பூர்வகம் அந்நியோந்நிய அத்தியாசரூப அகங்காரக்கிரந்தியாகிய காரணம் நிவிர்த்தி ஆவதால், நிவிர்த்தியாகின்றனவோ); அப்போது ஞானத்திற்கு முன், தேகத்தோடு அந்நியோந்நிய அத்தியாசத்தால் மரணசுபாவமுடைய புருஷன், அமிருதம் ஆகின்றனன் (அதாவது அந்நியோந்

நிய அத்தியாசம் இல்லாமையால் மரணம் இல்லாதவன் ஆகின்றனன்). [அந்த அமிருதம் (மரணமின்மையன்) ஆவதில் ஏதுவைக் கூறுகின்ருர்.] இந்தத் தேகத்திலேயே பிரஹ்மத்தைச் செவ்வையாக அடைகின்றனன்; என்பது இத்தத்துவ ஞானத்தின், அடைந்த போதே அடையப்படும் திருஷ்ட (பிரத்தியக்ஷ) பலமாகிய காம மரணுதிகளின் நீக்கத்தைப் பிரதிபாதிக்கும் சுருதியின் பொருள்.

இப்படிக் கூறிய பிரயோஜனம் சுருதியினுல் கேட்கப்பட்டதாம்; கண்டது அன்று எனின்? அச்சுருதியில் கூறிய பலம், பார்த்ததேயாம்; அதாவது ஞானவான்களால் பிரத்தியக்ஷ பலமாக அனுபவிக்கப்பட்டதேயாம். (என்றவாறு)

பஞ்சதசி, திருப்தி தீபம் 114ஆம் சுலோகம்.

" அந்யதேதி விஜாநீஹி த்ருஷ்டார்த்தத்வேந புக்திவத் | "

(இதன்பொருள்) தத்துவபாவனைவடிவ நிதித்தியாசனம், போஜனம் செய்வதால் பசியின் திருஷ்ட (பிரத்யக்ஷ) துக்கநிவிர்த்தி திருஷ்டபலமாக அடையப்படுவது போல; விபரீத பாவனு திருஷ்ட துக்க நிவிர்த்தி, திருஷ்டபலமாக அடையப் படுவதால் நியமமின்றிச் செய்யத்தக்கதாம். (என்றவாறு)

லகு வாசுதேவ மனனம், நான்காவது வர்ணகம்.
துக்கம் பிறவி விவரிக்கப்படும் வர்ணகம்

கத்யம் (வசனம்).

" ஏவம் ஸுஷுப்திஸுகவத் முக்திஸுகஸ்ய ஸ்வாநுபவ
கம்யத்வாத் ப்ரத்யக்ஷத்வமேவ "

(இதன் தமிழ் மொழிபெயர்ப்பு) ஸுஷுப்தியில் ஏற்படும் சுகம் போல, முக்தி சுகமும் தன் அநுபவத்தில் தெரிவதால் இந்த முக்தி சுகம் பிரத்யக்ஷமானது. (என்றவாறு)

## திருக்குறள் – மெய்யுணர்தல்

சார்புணர்ந்து சார்பு கெடஒழுகின் மற்றழித்துச்
சார்தரா சார்தரும் நோய்.

காமம் வெகுளி மயக்கம் இவைமூன்றன்
நாமம் கெடக்கெடும் நோய்.

### அவா அறுத்தல்

இன்பம் இடையரு(து) ஈண்டும் அவாஎன்னும்
துன்பத்துள் துன்பம் கெடின்.

ஆரா இயற்கை அவாநீப்பின் அந்நிலையே
பேரா இயற்கை தரும்.

## திருவாய்மொழி 78 ஆம் திருப்பதிகம்

நன்ருய் ஞானம் கடந்துபோய் நல்லிந் திரியம் எல்லாம் ஈர்த்து
ஓன்ருய்க் கிடந்த அரும்பெரும்பாழ் உழப்பில் அதனை உணர்ந்துஉணர்ந்து
சென்ருங்கு இன்பத் துன்பங்கள் செற்றுக் களைந்து பசையற்ருல்
அன்றே அப்போதே வீடு அதுவே வீடு வீடாமே.

---

இங்கு (41 ஆம் பக்கம்) அமைத்துள்ள திருஷ்டாந்த சித்திர விளக்கக் கருத்தின் விபரத்தைக் கூறும் அறிவுரைகள் :—

## அத்துவித உண்மை

ஸ்ரீ குமாரதேவ சுவாமிகள் அருளியது

சிங்கா தனத்தில் விற்றிருக்கும் சிறப்பார் அரசும் கனவடைந்து
மங்காப் புலைத்தன் மையைமேவி வருந்து வோன்றன் நனவுணரின்
அங்காம் சோக மோகமெலாம் அந்தக் கணமே நீங்குமதின்
இங்காம் சீவத் துவமோகம் இரியும் தனைத்தேர்ந்த அக்கணமே,

(இதன்பொருள்) சிங்காதனத்தில் அமர்ந்திருக்கும் சிறப்புப் பொருந்திய அரசனானவன், தூக்கமுற்றுக் கற்பிதக் கனவு நிலையையடைந்து, தன்னைச் சிறப்பற்ற புலைய பிட்சகனுகக் கண்டு துக்கப்படுகிறவன், தனது உண்மையான நனவு நிலையை அறிந்தானுயின், அந்தக் கற்பிதக் கனவிலுண்டான சோக மோகங்கள் (துக்க ஆசா மயக்கங்கள்) எல்லாம் அந்தக்கணத்திலேயே பிரத்தியக்ஷ பலமாக நீங்குவது போல; இவ்வுலகில் (அஞ்ஞான அத்தியாரோபத்தால் கற்பிதம்) ஆன சீவத்தன்மைச் சோக மோகங்கள் (துக்க ஆசாமயக்கங்கள்) அனைத்தும் தனது உண்மையுருவான ஆத்மப்பிரம்மத்தை அறிந்தானுயின். அந்தக்கணத்திலேயே பிரத்தியக்ஷபலமாக நீங்கும். (என்றவாறு)

## கைவல்லிய நவநீதம்

ஸ்ரீ தாண்டவராய சுவாமிகள் அருளியது.

ஸ்ரீ பொன்னம்பல சுவாமிகள் உரை.

### சந்தேகந் தெளிதல் படலம்

"ஓய்ந்த கனுவிற் கண்ட பழங்கதை" என்னும் தலைப்பையுடைய கவியின் விரிவுரைப் பகுதி :—அரசனுயுள்ளோன் நித்திராமோகத்தால் சொப்பனத்தில் பிட்சை ஏற்பவனுகத் தன்னைக் கண்டு விழித்தபின் அம்மோகம் நீங்கி அரசனுயிருந்து கொண்டு, முன்னே சொப்பனத்தில் கண்ட வாசனையால் தன்னைப் பிட்சகனுகச் சொல்லினும், உண்மையாகத் தான்பிட்சகனென்பது அவனுக்கு உள்ளே இல்லா




சிங்காதனத்தில் இருக்கும் அரசன் தன்னைப் பிட்சகனாகக் கனாக் காணுதல்

மைபோல, ஞானியும் பூர்வவாசனையால் சிதாபாசனைகத் தன்னை வியவகாரத்திற் சொல்லினும், அவனுள்ளே அகங்காரக்கிரந்தி யின்மையின் அவன் சிதாபாசன் அல்லன்; என்பதாம்.

மேற்படி கைவல்லிய நவநீதம், தத்துவ விளக்கப் படலம்.

"காண்ப எல்லாம் சொப்பனம் போலும் என்றே துணிந்தவன் ஞானியாவான்" — அறியப்படும் அகங்காராதிப் பிரபஞ்சம் அனைத்தும் சொப்பனப்பிரபஞ்சம் போலும் துச்சம், என்று சமுசய மின்றி அபரோட்சமாக நிச்சயித்தவனே ஞானியாம்.

ஞானவாசிட்டம்:—லவண அரசன் கதையும் மேற்கூறிய கருத் தைக் கூறுவதாம்.

என்பவையும் இவைபோன்ற பிறவும் ஆம்.

---

## [மகாவாக்கிய விசாரத்தினுல் உண்டாகும் ஞானத் தின் சம்பூர்ணத் தன்மையை அறிதல் விபரம்]

பஞ்சதசி யோகானந்தம் - சமஸ்கிருத சுலோகம் 84 (இதற்குரிய தமிழ்க்கவி 40) இதன் விரிவுரை - எப்போது "நான் கிருதார்த்தன் (நான் பிரம்மானந்த சாக்ஷாத்காரம் அடைந்தவனுதலால், செய்யத் தக்கன செய்து, அடையத்தக்கன அடைந்தவனுயிருக்கின்றேன்); கர்த்தவ்வியப் பிராப்தவ்வியங்களின் அபாவமுடையவனுயிருக் கின்றேன் (செய்யத் தக்கன, அடையத்தக்கனவற்றின் இன்மை யுடையவனுயிருக்கின்றேன்)"; என்று சந்தோஷ வடிவ நிரங்குச திருப்தியுறும் (தடையற்ற ஆனந்தமுறும்) புத்தியாகிய, கிருதார்த்தத் தன்மையின் புத்தி யுண்டாகின்றதோ, அப்போது ஞானத்தின் சம்பூர்ணத் தன்மை (நிறைவுத் தன்மை) அறியத் தக்கதாம்.

**மகாவாக்கிய விசார சங்கிரகம் முடிந்தது.**

---

மகாவாக்கிய விசாரத்தின் விரிவான விவரங்கள் — பஞ்சதசி மூன்றும் பிரகரணம் பஞ்சகோச விவேகத்திலும்; ஐந்தாம் பிரகரணம் மகாவாக்கிய விவேகத்திலும்; கைவல்லிய நவநீதம் தத்துவ விளக்கப் படலம் 64ஆம் கவி முதல் 82ஆம் கவி வரையும் கூறும் மகாவாக்கிய விசாரப் பிரசங்கத்திலும்; ரிபு கீதை இருபத்தெட்டாவது, நான்கு மகாவாக்கியார்த்தம் உரைக்கும் அத்தியாயத்திலும்; விசாரசாகரம் 270 - 271 ஆம் பிரசங்கங்களிலும்; விசாரசந்திரோதயம் நான்காம் கலையிலும்; பதினேராம் கலையிலும்; மகாவாக்கிய விசாரம் - மகா வாக்கிய விசாரசங்கிரகம் என்னும் நூல்களிலும்; இவை போன்ற பிற நூல்களிலும் காணலாம்.

[6 ஆம் பக்கத்தில் கூறியுள்ள ஸ்ரீ பகவத் கீதை
6 ஆம் அத்தியாயம் 35 ஆம் சுலோகமாகிய :—

அஸம்ஸயம் மஹாபாஹோ மனோ துர்நிக்ரஹம் சலம் |
அப்ப்யாஸேன து கௌந்தேய வைராக்யேண ச க்ருஹ்யதே ||

என்னும் சுலோகத்தில் ஸ்ரீ பகவானால் கூறப்பெற்ற மனதின் கிரம நிக்கிரக உபாயங்களாகிய வைராக்கியம், அப்பியாசம் என்னும் இரண்டுவித உபாயங்களினுள் அடங்குவனவாக, ஸ்ரீ வசிட்ட பகவானால் வாசிட்டத்தில் கூறப்பெற்ற மனதின் கிரம நிக்கிரக உபாயங்களாகிய நான்குவித உபாயங்கள் முதலிய விஷயங்கள், ஸ்ரீ பகவத் கீதை ஸ்ரீ சிற்கனானந்தகிரி சுவாமிகளின் கூடார்த்த தீபிகை உரை நூலில், மேற்கூறிய 6 ஆம் அத்தியாயம் 35 ஆம் சுலோகத்தின் உரையில் கூறப்பெற்றுள்ளன. அவற்றின் சுருக்கம் வருமாறு.]

ஸ்ரீ பகவானால் கூறப்பெற்ற மனதின் கிரம நிக்கிரக உபாயங்களாகிய விஷயங்கள், ஸ்ரீ வசிட்டபகவானாலும் கூறப் பெற்றுள்ளன.

## வாசிட்டம்

(ஸ்ரீ வசிட்டபகவான் அருளியது)

[சமஸ்கிருத சுலோகங்களுக்கு உரிய தமிழ்க் கவிகள்]

ஊகநன்மையால் அல்லது வெலப்படா(து) உள்ளம்
வேகமத்தமா அங்குசத்(து) அலால்வெலப் படுமோ
ஏகபோதத்தை அறிதல்நல் லவருடன் எய்தல்
சோகவாதனை விடல்உயிர் தோன்றுரு(து) ஒடுக்கல்.

உரைசெய்நால் வகையும்நெஞ்சை ஒடுக்கும்ஊ கங்களாகும்
புரையிலா இவற்றுக்(கு)உள்ளம் ஒடுங்குதல் புயல்மழைக்குத்
தரையுறு தூளிபோல்ஆம் சாற்றும்ஊ கங்கள்அன்றி
விரைவில்நெஞ்(சு) அடர்ப்பார்தீபம் விட்(டு)இருள் இருளால்தீர்ப்பார்.

(இவற்றின் பொருள்) உத்தமமான யுக்திகளாலன்றி மனமானது ஜயிக்கப்படமாட்டாது. துஷ்ட ஆக்கிரகமுடைய மதயானையானது அங்குசம் என்னும் ஆயுதத்தாலன்றி வெல்லப்படுமோ? ஏகமாகிய சித்சொரூபத்தை அறிதல், நல்லவர்களுடன் சேர்தல், துயர் மயமான வாசனையை (சம்ஸ்காரத்தை) விடுதல், பிராணனை அசையாது நிறுத்துதல் ஆகிய நான்கு விதங்களும் மனத்தை அடக்கும் யுக்திகளாம். குற்றமற்ற இந்த உபாயங்களுக்கு மனம் அடங்குதல், மேகமானது பெய்கின்ற நீர்த்தாரைக்குப் பூமியிலுள்ள தூளிகள் அடங்குதல் போலவாம். கூறிய யுக்திகளாகிய சாதனங்களில்லாமல் அடமாக மனத்தை நிக்கிரகம் பண்ணுவோர் தீபத்தை விடுத்து இருளை இருளினால் நீக்குபவர்க்குச் சமானமாவர். (என்றவாறு)

இப்பொருளை விளக்கிக் கூறுவாம் — அடநிக்கிரகமின்றிக் கிரமமாய் மனோ நிக்கிரகம் பண்ணுவதில் அத்தியான்மவித்தை ஒன்றே சிறந்த உபாயமாம். எப்படியென்றால், அத்தியான்மவித்தையானது, திருசியமித்தையாத்துவத்தையும் (அறியப்படும் உலகத்தின் பொய்த் தன்மையையும்), திருக்குவஸ்துவின் சுவப்பிரகாசத் தன்மையையும் (அறியும் சாக்ஷியறிவாகிய ஆன்மாவின் தனது அறிவொளியினால் விளங்கும் தன்மையையும்) போதிக்கின்றது. அவ்வாறாகவே, இம் மனம் தனது கோசரங்களான (அறிபடுவனவான) உலகப் பொருள்களில், மித்தை என்னும் ஏதுவால் பிரயோஜனமின்மையையும், பிரயோஜன முடையதான சாக்ஷியறிவாகிய ஆன்மாவில், சுவப்பிரகாசம் என்னும் ஏதுவால் கோசரமாகாத்தன்மையையும் (அறிபடுவது ஆகாத தன்மையையும்), அறிந்து விறகு இன்றிய நெருப்புப் போலத்தானாகவே நாசமாகின்றது. ஆதலின் இவ்வத்தியான்ம வித்தையின் பிராப்தி மன நிக்கிரகத்திற்குச் சிறந்த உபாயமாம்.

உணர்த்தியதத்துவத்தை நன்கு உணராதோனும், உணர்த்திய தத்துவத்தை மறப்பவனும் ஆகிய இவர்கட்கு மனநிக்கிரகத்தில் நல்லசாதுசங்கமே உபாயமாம் எப்படியெனின், அந்த மகாத்துமாக்கள் இவ்வதிகாரிக்கு அடிக்கடி தத்துவவுணர்வையும் நினைவையும் உண்டாக்குவார்கள்.

வித்தியாமதம் முதலிய மலினவாசனையால் பீடிக்கப்பட்டவனாய் சாதுசங்கத்தை அடையாதவனுக்கு, விவேகத்தால், அவ்வாசனையின் பரித்தியாகமே (நீக்கமே) உபாயமாம். அவ்வாறு வாசனையை நீக்க முடியாதவனுக்குப் பிராண சலன நிரோதமே உபாயமாம். என்னை, பிராணசலனம், வாசனை என்னும் இவ்விரண்டும் சித்தத்தைச் செலுத்துவனவாம். இவ்விரண்டின் நிரோதத்தால் சித்த சாந்தி அவசியம் உண்டாம். இவ்வாறு ஸ்ரீ வசிட்ட பகவானால் கூறப் பெற்ற மனதின் கிரம நிக்கிரக உபாயங்களாகிய, அத்தியான்ம வித்தை, சாது சங்கம், வாசனக்ஷயம், பிராணசலன நிரோதம் என்னும் நான்கு உபாயங்களும், ஸ்ரீ பகவானால் கூறப் பெற்ற, மனதின் கிரமநிக்கிரக உபாயங்களாகிய அப்பியாசம், வைராக்கியம் என்னும் இரண்டு உபாயங்களுள்ளே அடங்குவனவாம்.

விஷயத்தில் அடிக்கடி தோஷதிருஷ்டியாலுண்டாகிய வைராக்கியத்தால் விஷயப்பக்கத்தில் செல்லும் சித்த நதியின் பிரவாஹம் கட்டுப்படுகின்றது. விவேக தரிசனவடிவ அப்பியாசத்தால் பிரத்தியக்கான்மாவில் சித்தநதி பிரவாஹமாய்ச் செல்கின்றது. இவ்வாறு வைராக்கியம், அப்பியாசம் என்னும் இரண்டு உபாயங்களால் வசமாகும் சித்தநிரோதம், கேவல (தனியான) வைராக்கியத்தாலும், கேவல அப்பியாசத்தாலும் ஆவதில்லை. கருத்து இதுவாம்:— தீவிரமான வேகத்தோடு கூடிய நதிப்பிரவாகத்தை, மரம் மண் முதலியவைகளால் வாராவதி கட்டித் தடுத்து, அங்கொரு மதகு

அமைத்து, வயலுக்கு நேராய் வக்கிர (வளைவு)ப் பிரவாகம் உண்டாக்குவதுபோல், வைராக்கியத்தால், சித்த நதியின் விஷயாபிமுகப்பிரவாகத்தை நிவிருத்தித்துச் சமாதியப்பியாசத்தால் பிரத்தியக்குப்பிரவாகம் (உள் ஆத்மாவுக்கு வருதல்) உண்டாக்கப்படுகின்றது. இவ்வாறு வைராக்கிய அப்பியாசங்கட்குச் சித்த நிரோதத்தில் சமுச்சயமே (கலப்பே) பொருந்துகின்றது.

ஆகவே ஸ்ரீ பகவானால் கூறப் பெற்ற வைராக்கியம், அப்பியாசம் என்னும் இரண்டும் ஒன்றுக்கு ஒன்று உதவியாகிய கலப்பு முறையில் மனதின் கிரமநிக்கிரக உபாயங்களாம்.

---




முமுக்ஷு சீவனின் பக்ஷி உருவக சித்திரவிளக்கம்

## மேற்கூறிய மோக்ஷ சாதனங்களான வைராக்கிய அப்பியாசங்களின் திருஷ்டாந்த பூர்வக விளக்கங்கள்

[ஸ்ரீ பகவானுல் கூறப்பெற்ற மனதின் கிரம நிக்கிரக பூர்வகம் மோக்ஷத்தின் அந்தரங்க (சமீபித்த) சாதனங்கள் என்னும் உபாயங்களாகிய, வைராக்கியம், அப்பியாசம் என்னும் இரண்டு உபாயங்களும், ஒன்றற்கு ஒன்று உதவியாக அமைந்துள்ளன; என்பதற்கு, ஸ்ரீ சங்கராசாரிய சுவாமிகள் விவேகசூடாமணி என்னும் நூலில், பக்ஷியின் இரண்டு பக்ஷங்களை (இறக்கைகளை) திருஷ்டாந்தமாக (உவமானமாக)க் கூறியிருத்தல், சித்திர விளக்கத்துடன் கூறப்படுதல் வருமாறு]

(இவ்விஷயம் 11 ஆம் பக்கத்தில் கூறப்பட்டிருப்பினும், மீண்டும் இங்கு 46 ஆம் பக்கம் அமைத்துள்ள சித்திர விளக்கத்துடன் கூறப்படுகிறது.)

### விவேக சூடாமணி

(ஸ்ரீ சங்கராசாரிய சுவாமிகள் அருளியது)

பரவிடும் ஓர்பட் சிக்குப் பறந்திட இருபட் சம்போல்
மருவிடும் மோட்சம் ஆகும் மாடிமேல் சீவன் ஏற
விரதிநல் விவேகம் என்ன வேண்டிய(து) இரண்டு பட்சம்
இருமையில் ஒன்(று)இ லாதேல் ஈதின்மீ(து) ஏற ஒண்ணு.

(இதன் பொருள்) பறக்கும் ஒரு பட்சிக்குப் பறப்பதற்கு (ஒன்றுக்கு ஒன்று உதவியாக அமைந்துள்ள சாதனங்களான) இரண்டு பட்சங்கள் (இறக்கைகள்) வேண்டியனவாதல் போல; (பந்தமாகிய கீழ்வீட்டை விட்டு) அடையத்தக்க மோக்ஷமாகிய மாடியின் (மேல் வீட்டின்) மேல், முமுட்சு சீவனுகிய (மோக்ஷ விருப்பமுடைய சீவனுகிய) பட்சி ஏறுவதற்கு, (ஒன்றுக்கு ஒன்று உதவியாக அமைந்துள்ள சாதனங்களான) வைராக்கியம், நல்ல விவேகம் (ஆத்மப் பிரம்ம விசார ஞான அப்பியாசம்) என்னும், இரண்டு சாதனங்களாகிய பட்சங்கள் (இறக்கைகள்) வேண்டியனவாம். இந்த இரண்டு சாதனங்களாகிய பட்சங்களில் ஒன்று இல்லாவிட்டால் (மற்ற ஒன்றும் ஆக்கமற்றதாய் விடுமாதலால்) இந்த மோக்ஷமாகிய மாடியின்மேல் ஏறமுடியாது. (ஆகவே இரண்டு சாதனங்களையும் பொருந்தி மோக்ஷம் அடைய வேண்டியதாம்). (என்றவாறு)

அப்பியாசம் (ஆத்மப் பிரம்ம விசாரஞான அப்பியாசம்), விவேகம், ஞானம் என்பன ஒரு பொருட்சொற்கள்.

[ஸ்ரீ பகவான் கூறிய வைராக்கிய அப்பியாசங்களின் முயற்சி, நிரந்தரம் செய்வதில் மற்றக்காலங்களினும் மிகவும் அனுகூலமான காலதேச (இட)ங்களின் விபரங்கள் வருமாறு.

**காலம் கூறுதல் :—**

அதிகாலை நான்கு மணி முதல் ஆறு மணிவரை பிரம்ம முகூர்த்தம், என்று ஆன்றோர்களால் கூறப்பட்டுளது. இக்காலமானது இரவு உறக்கத்தில் மனமானது ஓய்வுபெற்று எழுகின்றதாதலால் அதிகச் சலனமின்றிய ஒருமை நிலையை மிகுதியாகவுறுகின்றது. ஆதலால் வைராக்கியம், ஆத்மப்பிரம்ம விசார ஞான அப்பியாசங்களின் முயற்சிக்கு, மற்றக் காலங்களினும் மிகவும் அனுகூலமாயிருத்தலைக் குறித்து ஆன்றோர்கள் பிரம்ம முகூர்த்தம் என்று பெயரிட்டனர்

மற்றும் முனிவர்கள் இயற்றிய "பதார்த்த குண சிந்தாமணி" என்னும் நூல் கூறுவது வருமாறு.

அதிகாலை விழிப்பின் குணம்.

புத்தி யதற்குப் பொருந்து தெளிவளிக்கும்
சுத்த நரம்பி(ன்)அறல் தூய்மையுறும் — பித்தொழியும்
தாலவளி பித்தகபம் தத்த(ம்)நிலை மன்னு(ம்) அதி
காலைவிழிப் பின்குணத்தைக் காண்.

(இதன் பதவுரை) அதிகாலை விழிப்பின் குணத்தைக்காண் — அதிகாலையில் விழிப்பதால் உண்டாகும் குணங்களைக் கூறுமாறு அறிவாயாக — புத்தியதற்குப் பொருந்து தெளிவு அளிக்கும் சுத்த நரம்பின் அறல் தூய்மை உறும் = புத்திக்குப் பொருந்துவதான தெளிவாகிய உணர்வைத் தருகின்ற சுத்த நரம்பினது துவாரத்தில் நிறைந்திருக்கின்ற நீரானது கலங்கலின்றிப் பரிசுத்தத்தை யடையும் (ஆதலால் புத்தியானது தெளிவாகிய உணர்வை உறும்) — பித்து ஒழியும் = பித்தப்பிணி நீங்கும் — தாலவளி பித்த கபம் தம்தம் நிலை மன்னும் = பூமியிலுள்ள உடம்புகளின் வாதமும், பித்தமும், சிலேத்துமமும் தன்தன் நிலைகளிலேயே பொருந்தியிருக்கும்; (ஆதலால் இம்மூன்றின் வேறுபாட்டால் வருகின்ற பிணிகள் வராமல் சரீரம் சுகத்தையுறும்). (என்றவாறு)

மற்றும் ஔவையார் கூறியுள்ள "வைகறைத் துயில் எழு = அதிகாலையில் நித்திரையைவிட்டு எழுவாயாக" என்னும் வாக்கியமும் அதிகாலையில் துயில் விட்டெழுதலால் பல நன்மைகள் உண்டாகும் என்பதை அறிவிக்கின்றது.

தேசம் கூறுதல் :—

ஏகாந்த தேச வாசம், அதாவது தனியிடம் இருத்தல் கூறப்படுகிறது.

விக்கினங்கள் அதாவது இடையூறுகள் இன்றி வைராக்கியம், ஆத்மப்பிரம்ம விசார ஞான அப்பியாசங்களின் முயற்சி செய்வதற்குத்தனிமையான அறையை ஏற்படுத்திக் கொண்டு அங்கிருந்து செய்வது மற்ற இடங்களிலிருந்து செய்வதிலும் அதிகமான அனுகூலம் உடையதாம் என்னும் கருத்தைக்கூறும் ஆன்ருேர் அறிவுரைகள் வருமாறு.

ஸ்ரீ பகவத் கீதை 18ஆம் அத்தியாயம் 52ஆம் சுலோகத்தின் பகுதி.

"விவிக்தஸேவீ = தனியிடத்தில் இருப்பவனுய் (அப்பியாசம் செய்க)".

## விவேக சூடாமணி

(ஸ்ரீ சங்கராசாரிய சுவாமிகள் அருளியது)

சமஸ்கிருத சுலோகம். "ஏகாந்த ஸ்திதி: இந்த்ரிய உபரமணே ஹேது:" என்னும் தலைப்பையுடைய 368 ஆம் சுலோகத்திற்கு உரிய தமிழ்க் கவிகள் இரண்டு வருமாறு.

ஏகாந்த தேச வாசம் இந்தியம் அடங்க ஏது
போகாத அவ்வ டக்கம் புரைமனம் அடங்க ஏது
ஏகாத அவ்வ டக்கம் இவ்வுடல் ஆதி நான்என்(ற)
ஆகாத வாத னைக்கோள் அடங்குதற்(கு) ஏது ஆமே.

வாதனை அடக்கத் தாலே வரையிலாப் பிரமா னந்தத்(து)
ஏதமில் அனுப வம்தான் என்றுமே தியானிக்(கு) எய்தும்
ஆதலால் விவேகி ஆனேன் அலைமன அடக்கம் தன்னைச்
சாதுவே முயற்சி யாலே சாதிக்க வேண்டும் என்றும்.

## ஆத்ம போதம்

(ஸ்ரீ சங்கராசாரிய சுவாமிகள் அருளியது)

(சிக்கத்தம்பூர் - ஸ்ரீ பிரம்மானந்த சுவாமிகள் இயற்றிய தமிழ் உரை)

38 ஆம் சுலோகம்.

விவிக்த தேச ஆஸீனே விராகோ விஜிதேந்த்ரிய: |
பாவயே தேகமாத்மாநம் தமநந்த மநந்யதீ: ||

(அவதாரிகை) பிரம்மானுசந்தானத்தில் சாதனமான நியமங்களைக் கூறுகின்ருர்.

(சுலோகார்த்தம்) சாதகன் ஜனங்களின்றிய தனியிடத்தில் (சுக ஆசனத்தில்) இருந்து கொண்டு, இராகம் (ஆசை) ஒழிந்தவனுய், அதனுல் இந்திரியங்களை ஜெயித்தவனுய் அதாவது அடக்கியவனுய்,

அந்நிய புத்தி இல்லாதவனுய் (பிரம்மத்தில் மாத்திரம் நிச்சயமுள்ள புத்தியுடையவனுய்) அநந்தமும் அதாவது நாசமற்றதும், ஏகமும் அதாவது ஒன்ருனதும் ஆகிய அவ்வாத்மாவை தியானிக்கக் கடவன். (என்றவாறு)

மேற்கூறிய ஆத்ம போதத்திற்கு - உத்தரகாசி. ஸ்ரீ சின்மயாநந்த சுவாமிகள் இயற்றிய உரை நூலில் "விவிக்ததேச ஆஸீனே = தனியிடத்தில் இருந்து கொண்டு" என்பதன் விரிவுரையில் கூறியுள்ள விஷயம் வருமாறு - தனியிடம் என்ருல், பிறருடைய தொந்தரவோ, பிறவற்றின் தொந்தரவோ இல்லாத இடம் என்பது கருத்து - சிலருக்கு அவ்விதம் தனியான இடம் அமையாவிட்டால், நேரத்தால் தனியான இடம் ஆகுமாறு ஏற்பாடு செய்து கொள்ளலாம்.

அதிகாலை 4மணி நேரமாகிய பிரம்ம முகூர்த்தத்தில் எழுந்திருந்தால் தியானம் செய்வதற்கு வசதியான தனியிடம் அமையும். வேறு ஒருவரும் எழுந்திருக்காத காரணத்தால் அவர்களால் வரும் மனச் சஞ்சலம் இன்றித் தனித்திருந்து தியானம் செய்யலாம். என்பதாம்.

ஔவையார் வாக்கியம் - "இனிது இனிது ஏகாந்தம் இனிது." என்பவைகளாம்.

**இரண்டாவது கீர்த்தனை**

ராகம்: ஹிந்தோளம் — தாளம்: ஆதி.

**பல்லவி**

என்னவென்று சொல்வேன் — நான்
என்னவென்று சொல்வேன் — ஐயன்
இன்னருள் புரிந்த — நன்னய வாக்யங்களை (என்னவென்று)

**அனுபல்லவி**

உன்னை நீ அறிந்திடில் — ஒரு குறை இல்லை என்று
தன்னை அறிந்தின்பமுறும் - தத்துவம் உணர்த்தியதை (என்னவென்று)

**சரணம் 1**

அபரோக்ஷ ஞானத்தை — அடைந்திடாமல் யானும்
பரோக்ஷ ஞானம் கொண்டு — வினவிய சங்கைக் கெல்லாம்
சாந்த ஸ்வரூபன் - சற்குண யோகி-தயாசிந்து-தக்ஷிணுமூர்த்தியாய்
தானத்தமர்ந்து மொழிந்த — சமாதானங்களை (என்னவென்று)

**சரணம் 2**

"பித்யதே ஹ்ருதய க்ரந்திச் சித்யந்தே ஸர்வஸம்சயா: |
க்ஷீயந்தே சாஸ்ய கர்மாணி தஸ்மிந் த்ருஷ்டே பராவரே ||"

என்ற சுருதி ஓதி — இகத்தில் பரம்பொருளை
இனிது கண்ட அக்கணமே அகங்காரம் ஒழியும்
ஏற்படும் ஐயம் தீரும் கர்மம் எல்லாம் நசிக்கும்
என்று சொல்லி ஐயன் அப்பர வஸ்துவை
கண்டிட நீயே காந்தமாய் இருந்து
சிந்திப்பாய் என்று செப்பிய பரமகுரு
துக்க நிவிர்த்தியாகி பரமானந்த ப்ராப்தியே
அடைந்திடுவாய் என்ற ஆசி மொழிகளை (என்னவென்று)

---

இதன் பதவுரை :—

**பல்லவி**

[முன்னுரை - பேரூர். ஸ்ரீ சாந்தலிங்க சுவாமிகள் அருளிய வைராக்கிய சதகத்தின் தோத்திரப் பகுதியில் உள்ள ஸ்ரீ நடராஜப் பெருமானாகிய இறைவனது தோத்திரங்களில் ஒன்று வருமாறு :—

உன்னும் உணர்வுக்(கு) உணர்வாய் எனக்(கு) உண்மை தந்தாய்
மன்னும் சுருதிப் பொருளாய் வழி காட்டி நின்றாய்
பின்னும் குருவாய் அடைந்து(உ)ன் அருள் பேண வைத்தாய்
என்னென்(று) உரைப்பேன் நின்கருணை இருந்த வாறே.

(இதன் பொருள்) கருதும் அறிவுக்கு அறிவாய் இருந்து எனக்கு உண்மை உணர்வைத் தந்தருளினீர். நிலைபெற்ற வேத அர்த்தமாய் இருந்து ஞானமார்க்கத்தை அறிவித்து நின்றீர். பின்னரும் குருவாகி வந்து உமது கிருபையோடு கூடிய உபதேசத்தைப் போற்றும்படி செய்தீர். என்மீது உமது கிருபை இருந்த பெருமைத் தன்மையானது அளவிட முடியாதவாறு உள்ளது; ஆதலால் எவ்வாறு அளவிட்டுக் கூறுவேன் (அளவிட்டுக் கூறமுடியாத நிலையில் உள்ளேன்). (என்றவாறு)

இவ்வாறு ஸ்ரீ சாந்தலிங்க சுவாமிகள் கூறிய முறையிலும், இது போன்றே பல ஆன்றோர்கள் கூறிய முறையிலும் "என்ன வென்று சொல்வேன்" என்னும் தலைப்பையுடைய துதிவடிவ கீர்த்தனையைக் கூறுகின்றார்.]

நான் = (குருநாதரிடம் ஞான உபதேசம் கேட்ட) நான் - ஐயன் = குருநாதர் - இன்னருள் புரிந்த = இனிய கிருபையுடன் உபதேசம் செய்த - நல்நய வாக்கியங்களை = நல்ல முக்தியாகிய பயனை அளிக்கக்கூடிய ஞான உபதேச வாக்கியங்களை — என்ன என்று சொல்வேன் = (அளவிடமுடியாத பெருமையுடையதாயிருத்தலின்) எத்தன்மைய அளவினதான பெருமையுடையது என்று அளவிட்டுக் கூறுவேன் (அளவிட்டுக் கூறமுடியாத நிலையில் உள்ளேன்) - என்ன என்று சொல்வேன்,

**அனுபல்லவி**

உன்னை நீ அறிந்திடில் = உனது யதார்த்த சொரூபமான ஆத்மப் பிரம்ம சொரூபத்தை ஜீவனுன நீ அறிவாயானுல் - ஒரு குறை இல்லை என்று = உனக்கு ஒருவிதமான குறையாகிய துன்பமும் இல்லாததாகும் என்று - தன்னை அறிந்து இன்பம் உறும் = தானுகிய ஆத்மப் பிரம்ம சொரூபத்தை அறிந்து பேரின்ப முக்தியுறும் - தத்துவம் உணர்த்தியதை = உண்மை அறிவை அறிவித்ததை - என்ன என்று சொல்வேன்.

**சரணம் 1**

யானும் = நானும் - அபரோக்ஷ ஞானத்தை அடைந்திடாமல் = (ஆத்மப் பிரம்ம சாக்ஷாத்காரமாகிய அதாவது ஆத்மப் பிரம்மத்தோடு நேர்படுவதாகிய) அபரோக்ஷ அனுபவ ஞானத்தை அடையாமல் - பரோக்ஷ ஞானம் கொண்டு = (ஆத்மப் பிரம்மம் உண்டு என்று நம்புவதாகிய) பரோக்ஷ ஞானக் கொள்கையாய் - வினவிய சங்கைக்கு எல்லாம் = வினுவிய சந்தேகங்கள் எல்லாவற்றுக்கும் - சாந்த ஸ்வரூபன் = சாந்தமான மனசொரூபம் உள்ளவரும் - சற்குணயோகி = சதாசாரகுணமுடைய யோகியானவரும் — தயாசிந்து = கருணுசாகரம் ஆனவரும் ஆகிய குருநாதர் - தானத்து = பீடத்தினிடத்தில் - தக்ஷிணு மூர்த்தியாய் = தென்முகத் தெய்வமாய் - அமர்ந்து = அமைந்து — மொழிந்த = கூறிய — சமாதானங்களை = வினுவுக்கு உரிய விடைகளை - என்ன என்று சொல்வேன்.

**சரணம் 2**

[முன்னுரை - அதர்வண வேதத்தின் முண்டகோப நிடதத்தில் உள்ள "பித்யதே" என்னும் தலைப்பையுடைய சுலோகத்தைக் கூறுகின்ருர்.]

முண்டகோபநிடதம், 2ஆம் முண்டகம், 2ஆம் கண்டம், 9ஆம் சுலோகம்.

பித்யதே ஹ்ருதய க்ரந்திச் சித்யந்தே ஸர்வஸம்சயா: |
க்ஷீயந்தே சாஸ்ய கர்மாணி தஸ்மிந் த்ருஷ்டே பராவரே ||

(இதன் பதவுரை) பராவரே = (பரம் (மேல்) ஆகிய பிரம்ம லோகாதி பதங்களும் எந்த ஆத்மப் பிரம்மத்தினும், அவரம் (தாழ்ந்தன) ஆக இருக்கின்றனவோ, அப்படி மேலுக்கெல்லாம் மேலாக இருக்கப் பட்ட ஆத்மப் பிரம்மம் பராவரம் எனப்படும்; அத்தகைய) பராவரம் ஆகிய - தஸ்மிந் = அந்தப் பரமாத்மாவை - த்ருஷ்டே = கண்ட (அறிந்த) காலத்தில் (காரண அஞ்ஞானம் நசித்தலால்) - அஸ்ய = இந்தப் புருஷனது — ஹ்ருதய க்ரந்தி: = இருதயக்கிரந்தி

என்னும் ஆன்ம அகங்காரங்களின் அந்நியோந்நிய அத்தியாச மாகிய அகங்காரக் கிரந்தி (முடிச்சு)—பித்யதே = பேதத்தை அடை கின்றது – ஸர்வ ஸம்சயா : = சகல சந்தேகங்களும் – சித்யந்தே = சேதிக்கப்படுகின்றன – ச கர்மாணி = கர்மங்கள் – க்ஷீயந்தே = க்ஷயத்தை (நாசத்தை) அடைகின்றன. (என்றவாறு)

(மேற்கூறிய "பித்யதே என்னும் தலைப்பையுடைய சுலோகத்தின் விரிவுரை முதலிய விஷயங்கள் 55 ஆம் பக்கம் முதல் கூறப் பட்டுள்ளன.)

என்ற சுருதி ஓதி = என்று கூறுகின்ற அதர்வண வேதத்தின் முண்டகோபநிடத சுலோகார்த்தம் கூறி – இகத்தில் = இவ்வுலகத்தி லேயே – பரம்பொருளை = மேலான ஆத்மப்பிரம்மப்பொருளை – இனிதுகண்ட அக்கணமே = நன்ருக அறிந்த அந்தக் கணத்தி லேயே – அகங்காரம் ஒழியும் = அறியப்படுகின்ற அகங்காரக்கிரந்தி ஒழிந்து போம் - ஏற்படும் ஐயம் தீரும் = உண்டாகும் சந்தேகங்கள் எல்லாம் தீர்ந்து போகும் – கர்மம் எல்லாம் நசிக்கும் = (ஞானியின் சுயதிருஷ்டியில்) ஆகாமியம், சஞ்சிதம், பிராரப்தம் என்னும் கர்மங் கள் அனைத்தும் நாசமடையும் (அஞ்ஞானியின் கற்பனை திருஷ்டியில் ஞானியின் பிராரப்தகர்ம அனுபவத் தோற்றம் உண்டு) – என்று = என இவ்வாறு – ஐயன் சொல்லி = குருநாதர் உப தேசம் செய்து – அப்பர வஸ்துவை = அந்த மேலுக்கெல்லாம் மேலான ஆத்மப்பிரம் மத்தை – கண்டிட = திடஅபரோக்ஷமாக அறிந்து கொள்ள – நீ ஏகாந்தமாய் இருந்து = நீ தனியிடத்தில் இருந்து – சிந்திப்பாய் என்று = (அகம் பிரம்ம அஸ்மி என்னும் அனுபூதி மகாவாக்கிய விசா ரமாகிய) சிந்தனையைச் செய்வாயாக என்று – செப்பிய பரமகுரு = உபதேசம் செய்த மேலான ஞான குருநாதரானவர் – துக்க நிவிர்த் தியாகிப் பரமானந்தப் பிராப்தியே = சர்வதுக்கங்களும் நீங்கிப் பரமானந்த அடைவு உறுவதாகிய மோக்ஷத்தையே – அடைந்திடு வாய் என்ற = அடைவாயாக என்று கூறிய – ஆசி மொழிகளை = ஆசீர்வாதம் என்னும் வாழ்த்து உரைகளை – என்ன என்று சொல் வேன். (என்றவாறு)

("என்ன என்று சொல்வேன்" என்பதற்கு, முதலில் உரைகூறி யுள்ளது ; அந்த உரையையே மற்ற இடங்களில் வருவதற்கும் கொள்க.)

(பொழிப்புரை)

**பல்லவி**

(குருநாதரிடம் ஞான உபதேசம் கேட்ட) நான், குருநாதர் இனிய கிருபையுடன் உபதேசம் செய்த, நல்ல முக்தியாகிய பயனை அளிக்கக் கூடிய ஞான உபதேச வாக்கியங்களை (அளவிடமுடியாத

பெருமையுடையதாயிருத்தலின்) எத்தன்மைய அளவினதான பெருமையுடையது என்று அளவிட்டுக் கூறுவேன்! (அளவிட்டுக் கூற முடியாத நிலையில் உள்ளேன்). என்ன என்று சொல்வேன்!

**அனுபல்லவி**

உனது யதார்த்த சொரூபமான ஆத்மப் பிரம்ம சொரூபத்தை, ஜீவனுகிய நீ அறிவாயானல், உனக்கு ஒருவிதமான குறையாகிய துன்பமும் இல்லாததாகும் என்று, தானுகிய ஆத்மப் பிரம்ம சொரூபத்தை அறிந்து பேரின்ப முக்தியுறும் உண்மை அறிவை அறிவித்ததை, என்ன என்று சொல்வேன்!

**சரணம் 1**

நானும் (ஆத்மப் பிரம்ம சாக்ஷாத்காரமாகிய அதாவது ஆத்மப் பிரம்மத்தோடு நேர்படுவதாகிய) அபரோக்ஷ அனுபவ ஞானத்தை அடையாமல், (ஆத்மப் பிரம்மம் உண்டு என்று நம்புவதாகிய) பரோக்ஷ ஞானக் கொள்கையாய், வினுவிய சந்தேகங்கள் எல்லாவற்றுக்கும், சாந்தமான மன சொரூபம் உள்ளவரும், சதாசார குணமுடைய யோகியானவரும், கருணுசாகரம் ஆனவரும் ஆகிய குருநாதர், பீடத்தினிடத்தில் தென்முகத் தெய்வமாய் அமைந்து கூறிய, வினுவுக்கு உரிய விடைகளை, என்ன என்று சொல்வேன்!

**சரணம் 2**

[முன்னுரை – அதர்வண வேதத்தின் முண்டகோபநிடதத்தில் உள்ள "பித்யதே" என்னும் தலைப்பையுடைய சுலோகத்தைக் கூறுகின்ருர்.]

முண்டகோபநிடதம், 2ஆம் முண்டகம், 2ஆம் கண்டம், 9ஆம் சுலோகம்.

(பொழிப்புரை) (பரம் (மேல்) ஆகிய பிரம்மலோகாதி பதங்களும் எந்த ஆத்மப் பிரம்மத்தினும், அவரம் (தாழ்ந்தன) ஆக இருக்கின்றனவோ, அப்படி மேலுக்கெல்லாம் மேலாக இருக்கப்பட்ட ஆத்மப் பிரம்மம் பராவரம் எனப்படும்; அத்தகைய) பராவரம் ஆகிய, அந்தப் பரமாத்மாவைக் கண்ட (அறிந்த) காலத்தில் (காரண அஞ்ஞானம் நசித்தலால்) இந்தப் புருஷனது இருதயக்கிரந்தி என்னும் ஆன்ம அகங்காரங்களின் அந்நியோந்நிய அத்தியாசமாகிய அகங்காரக் கிரந்தி (முடிச்சு) பேதத்தை அடைகின்றது; சகல சந்தேகங்களும் சேதிக்கப்படுகின்றன; கர்மங்கள் க்ஷயத்தை (நாசத்தை) அடைகின்றன. என்று கூறுகின்ற அதர்வண வேதத்தின் முண்டகோபநிடத சுலோகார்த்தம் கூறி, இவ்வுலகத்திலேயே மேலான ஆத்மப் பிரம்மப் பொருளை நன்ருக அறிந்த அந்தக் கணத்திலேயே, அறியப்

படுகின்ற அகங்காரக்கிரந்தி ஒழிந்துபோம்; உண்டாகும் சந்தேகங்கள் எல்லாம் தீர்ந்து போகும்; (ஞானியின் சுயதிருஷ்டியில்) ஆகாமியம், சஞ்சிதம், பிராரப்தம் என்னும் கர்மங்கள் அனைத்தும் நாசமடையும் (அஞ்ஞானியின் கற்பனை திருஷ்டியில் ஞானியின் பிராரப்த கர்ம அனுபவத் தோற்றம் உண்டு). என இவ்வாறு குருநாதர் உபதேசம் செய்து, அந்த மேலுக்கெல்லாம் மேலான ஆத்மப் பிரம்மத்தைத் திட அபரோக்ஷமாக அறிந்து கொள்ள, நீ தனியிடத்தில் இருந்து (அகம் பிரம்ம அஸ்மி என்னும் அனுபூதி மகாவாக்கிய விசாரமாகிய) சிந்தனையைச் செய்வாயாக என்று, உபதேசம் செய்த மேலான ஞான குருநாதரானவர், சர்வதுக்கங்களும் நீங்கிப் பரமானந்த அடைவு உறுவதாகிய மோக்ஷத்தையே அடைவாயாக என்று கூறிய, ஆசீர்வாதம் என்னும் வாழ்த்து உரைகளை என்ன என்று சொல்வேன். (என்றவாறு)

[ 52ஆம் பக்கத்தில் கூறியுள்ள "பித்யதே" என்னும் தலைப்பையுடைய சுலோகத்தின் விரிவுரை முதலிய விஷயங்கள் வருமாறு.]

பஞ்சதசியில் மேற்படி சுலோகார்த்தம் கூறுவது வருமாறு.

"பித்யதே" என்னும் தலைப்பையுடைய முண்டகோபநிடதத்தின் சுலோகமானது, ஸ்ரீ வித்தியாரண்ணிய சுவாமிகள் சமஸ்கிருதத்தில் இயற்றிய பஞ்சதசி மூல சுலோக நூலில், யோகானந்தம் என்னும் பிரகரணத்தில் ஏழாம் சுலோகமாக அமைக்கப்பட்டுள்ளது.

இந்தச் சமஸ்கிருத சுலோக பஞ்சதசிக்கு ஸ்ரீ வித்தியாரண்ணிய சுவாமிகளின் சிஷ்யரான, பண்டித ஸ்ரீ இராமகிருஷ்ண சுவாமிகள் சமஸ்கிருதத்தில் சிறந்த வியாக்கியானம் (விரிவுரை) இயற்றியுள்ளனர். இந்த வியாக்கியானத்துடன் கூடிய பஞ்சதசியை சிக்கத்தம்பூர் (தஞ்சாவூர்) ஸ்ரீ வி. பிரம்மானந்த சுவாமிகள் தமிழில் மொழிபெயர்த்ததுடன் விளக்கவுரைகளும் அதில் கூறியுள்ளனர்.

இத்தகைய தமிழ் மொழிபெயர்ப்புப்பஞ்சதசியில் மேற்கூறியபடி யோகானந்தப் பிரகரணத்தில் ஏழாம் சுலோகமாக அமைக்கப் பெற்றுள்ள "பித்யதே" என்னும் தலைப்பையுடைய சுலோகத்தின் உரை அதில் கூறியுள்ளவாறு வருமாறு.

சுலோகம்.

பித்யதே ஹ்ருதய க்ரந்திச் சித்யந்தே ஸர்வஸம்சயா: |
க்ஷீயந்தே சாஸ்ய கர்மாணி தஸ்மிந் த்ருஷ்டே பராவரே ||

(சுலோகார்த்தம்) பராவரமாகிய அப்பரமாத்மாவை அறிந்த காலத்து இப்புருஷனது இருதயக்கிரந்தி பேதத்தை யடைகின்றது; சர்வசம்சயங்களும் சேதிக்கப்படுகின்றன; கர்மங்கள் நசிக்கின்றன.

(வியாக்கியானம்) பர அதாவது இரண்ய கர்ப்பாதி மேன்மை யான பதங்களும் அவரம் அதாவது எதனினும் தாழ்ந்தனவாயிருக் கின்றனவோ, அப்படிப்பட்ட பராவரமாகிய பரமாத்மாவினைச் சாக்ஷாத்கரித்தகாலத்து, அச்சாக்ஷாத்கார முடைய புருஷனது இருதயக்கிரந்தி அதாவது இருதயமாகிய புத்திசிதாத்மாக்களுக்குக் கிரந்தியினைப் போலத் திடசம்பந்தவடிவமாயிருத்தலால் கிரந்தி வடிவ அந்நியோந்நியாத்தியாசமெதுவோ அது பேதத்தை யடை கின்றது; அதாவது நாசமாகின்றது என்பது பொருள். சர்வசம் சயங்களும் அதாவது ஆத்மா தேகாதிகளினும் வேரு? அன்ரு? வேருயினும், கர்த்திருத்து வாதி தர்மமுடையதா? அன்ரு? அகர்த் தாவாயினும், அவ்வாத்மாவிற்குப் பிரஹ்மத்தோடு பேதமிருக் கிறதா? இல்லையா? அபேதமாயினும், அந்தப் பிரஹ்மத்தோடு அபின்னமான ஆத்மாவின் ஞானம் கர்மாதிகளோடு முக்திக்குச் சாதனமா? அல்லது தனியாகவா? இவை முதலிய சம்சயங்களும் சேதிக்கப்படுகின்றன; ஏனெனில், யதார்த்த சொரூபமாகச் சாக்ஷாத் கரிக்கப்பட்ட வஸ்து, சம்சய விபரீதங்களுக்கு விஷயமாதல் காணப் படாமையால் என்பது தாற்பரியம். கர்மங்களான சஞ்சித புண்ணிய அபுண்ணியங்கள் க்ஷயத்தை யடைகின்றன; அதாவது தமது உபா தான (காரண) மாகிய அஞ்ஞானத்தின் நாசத்தால் (அதன் காரியங் களாகிய இவைகள்) நாசத்தை யடைகின்றன. (என்றவாறு)

ஜீவன்முக்தி விவேகத்தில் மேற்படி சுலோகார்த்தம் கூறுவது வருமாறு.

ஜீவன்முக்தி விவேகம் - ஸ்ரீ வித்தியாரண்ணிய சுவாமிகள் அருளியது. சிக்கத்தம்பூர் (தஞ்சாவூர்) ஸ்ரீ வி. பிரம்மானந்த சுவாமி களால் தமிழில் மொழிபெயர்க்கப்பட்டது.

ஜீவன் முக்திக்குப் பிரமாணப் பிரகரணம்.

உதாரணம், முண்டக சுருதியின் சுலோகத்தில் :—

“ பித்யதே ஹ்ருதய க்ரந்திச் சித்யந்தே ஸர்வஸம்சயா: |
க்ஷீயந்தே சாஸ்ய கர்மாணி தஸ்மிந் த்ருஷ்டே பராவரே ||

அப்பராவரம் அறியப்பட்டபோது இவனுடைய இருதயக்கிரந்தி (முடிச்சு) பேதிக்கின்றது; சர்வசம்சயங்களும் சிதைகின்றன; கர்மங் களும் நசிக்கின்றன ”. என்று சொல்லப்பட்டிருக்கின்றது.

பரமா (மேலா)கிய ஹிரணியகர்ப்பாதியரின் பதங்களும் எதனை நோக்க அவரம் (தாழ்ந்தன) ஆகின்றனவோ அது பராவரம் ஆம். இருதயமாகிய புத்தியில் சாக்ஷியின் தாதாத்மியாத்தியாசம் அநாதி அவித்தையினுல் நிருமிக்கப்பட்டதாயிருத்தலால் கிரந்தியினை (முடிச்சை)ப் போல திடப்பின்னல் வடிவமாயிருத்தலின் கிரந்தி

எனப்படுகின்றது ஆத்மா சாக்ஷியா? கர்த்தாவா? சாக்ஷித்துவ மிருக்கினும், பிரஹ்மத்துவமிருக்கின்றதா? இல்லையா? பிரஹ்மத்துவ மிருக்கினும், அந்தப் புத்தியால் அறியக்கூடியதா? கூடாததா? கூடியதாயினும், அதனை யறிந்த மாத்திரத்தால் முக்தியுண்டா? இல்லையா? என்னும் இவை முதலியன சம்சயங்களாம். கர்மங்கள் சஞ்சிதம், ஆகாமியம் என்பனவாம். சொல்லப்பட்ட இருதயக் கிரந்தி, சம்சயங்கள், கர்மங்கள் ஆகிய இம்மூன்றும் அவித்தையினுல் ஆக்கப்பட்டதாயிருத்தலின், ஆத்மப்பிரஹ்மதரிசனத்தால் அவித் தையாகிய உபாதான காரணம் நீங்குதலால் அதன் காரியங்களா கிய இவைகள் நீங்குகின்றன.

ஞானவாசிட்டத்தில் மேற்படி சுலோகார்த்தம் கூறுவது வரு மாறு.

ஞானவாசிட்டம் - ஸ்ரீ வசிட்டமுனிவர் அருளியது.

வீரை - ஸ்ரீ ஆளவந்தார் முனிவரால் தமிழில் கவிகளாக மொழி பெயர்க்கப்பட்டது.

உற்பத்திப்பிரகரணம் ஞானவிண்மகன் கதையின் 34 ஆம் கவி யாகிய "நிருவிகற்ப ஆன்மாவில்" என்னும் தலைப்பையுடைய கவியின் பகுதி.

"பராபரமாம் அப்பொருளை வயங்கக் கண்டால்
பெருமனக்கட்டுஅறும் ஐயம்அறும் கருமம்அறும் என்றுன் பெரியோன்"

(இதன் பொருள்) பரங்களும் அபரங்களாகும்படி விளங்கும் அத் தகைய பரமாத்மாவை ஐயமும் (சந்தேகமும்) திரிபும் (விபரீதமும்) அற அறிந்தால், (அவ்வாறு அறிந்த ஞானியின் பூர்வகால அஞ் ஞான திருஷ்டியின் கற்பனைத் தோற்றங்களான) இருதயக்கிரந்தி என்னும் அகங்காரக் கிரந்தியானது ஒழியும்; சகல சந்தேகங்களும் ஒழியும்; கர்மங்கள் யாவும் ஒழியும் என்று மகாமுனியாகிய ஸ்ரீ வசிட்ட முனிவர் ஸ்ரீ இராமபிரானுக்குக் கூறினுர். (என்றவாறு)

மற்றும் பல நூல்களிலும் மேற்படி சுலோகார்த்தம் ஞானுப தேசமாகக் கூறப்பட்டுள்ளது.

இத்தகைய "பித்யதே" என்னும் தலைப்பையுடைய முண்ட கோபநிடத சுலோகத்தில் கூறியுள்ளபடி, பராவரம் ஆகிய அந்தப் பரமாத்மாவைக் காண்ப (அறிவ) தாவது; முன்னைய கீர்த்தனையில் கூறப்பட்ட ஸ்ரீ பகவத் கீதை, 6ஆம் அத்தியாயம் 35ஆம் சுலோக மாகிய —

அஸம்சயம் மகாபாஹோ மனே துர்நிக்ரஹம் சலம் |
அப்ப்யாஸேனது கௌந்தேய வைராக்யேண ச க்ருஹ்யதே ||

என்னும் சுலோகத்தில் கூறியுள்ளபடியான அப்பியாசமேயாம்.

---

[மேற்கூறிய வேதசாஸ்திரங்கள் கூறுகின்ற ஞான உபதேசத்தைக் குருமூர்த்திகள் சீடர்கட்கு அறிவிக்கும்போது, தமது கையில் அமைத்துக் காட்டி அறிவிக்கும், ஞான முத்திரையாகிய சிந்முத்திரையின் விளக்கம் வருமாறு.]

## சிந்முத்திரார்த்தம் (சிந்முத்திரையின் பொருள்).

சிந்முத்திரைப் படம்




கையிலுள்ள சிறு விரலையும் மோதிர விரலையும் நடுவிரலையும் விலக்கிச் சுட்டுவிரலின் நுனியையும் பெருவிரலின் நுனியையும் சேர்த்து ஒன்றுபடுத்திக் காட்டுவது சிந்முத்திரையாம்.

இந்தச் சிந்முத்திரையை ஸ்ரீ ஆதி குருதக்ஷிணாமூர்த்தி, ஸ்ரீ இராம பகவான், ஸ்ரீ கிருஷ்ண பகவான், ஸ்ரீ ஜகத்குரு சங்கராச்சாரிய சுவாமிகள் முதலிய சற்குருமூர்த்திகளின் உபதேசக்கோல உருவங்களில் காணலாம்.

சித்முத்திரை = சிந்முத்திரை = ஞானமுத்திரை. சீடர்கள் சர்வதுக்க நிவிர்த்தி பரமானந்தப் பிராப்தியாகிய முக்தி என்னும் பேரின்பவீடு அடையும் பொருட்டு, குருமூர்த்திகள் கையில் அமைத்துக் காட்டி அறிவிக்கும் சிந்முத்திரை அறிவிப்பின் விபர விளக்கம் வருமாறு:— இங்குள்ள சிந்முத்திரைச் சித்திரத்தில் குறிப்பிட்டுள்ள எண்கள் விரல்களின் விபரங்களைக் குறிப்பனவாம்.

5. சிறுவிரல் - மலம் என்னும் பாபகர்மத்தைக் குறிக்கும். சிறுவிரலை விலக்கிக் காட்டுவதால் ஈசனைக் குறித்துச் செய்யும் நிஷ்காம புண்ணிய கர்மத்தினுல், மலம் என்னும் பாபகர்மத்தை விலக்க வேண்டும் என அறிவிப்பதாம்.

4. மோதிர விரல் - விக்ஷேபம் என்னும் சித்தசஞ்சலத்தைக் குறிக்கும். மோதிர விரலை விலக்கிக் காட்டுவதால், ஈசனைக் குறித்துச் செய்யும் நிஷ்காம உபாசனையால், விக்ஷேபம் என்னும் சித்த சஞ்சலத்தை விலக்க வேண்டும் என அறிவிப்பதாம்.

3. நடுவிரல் – அஞ்ஞானம் என்னும் அறியாமையைக் குறிக்கும். நடுவிரலை விலக்கிக் காட்டுவதால், சீவஈசுர யதார்த்த சொரூபமான ஆத்மப் பிரம்ம ஐக்கிய சொரூபத்தை அறிவதாகிய ஞானத்தால், அஞ்ஞானம் என்னும் அறியாமையை விலக்கவேண்டும் என அறிவிப்பதாம்.

இங்குக்கூறிய ஆத்மப் பிரம்ம ஐக்கிய (ஏக) சொரூபத்தை அறிவதாகிய ஞான விபரம் வருமாறு:—

2. சுட்டுவிரல் – சீவனைக் குறிக்கும். } சுட்டுவிரல் நுனியையும்
1. பெருவிரல் – ஈசனைக் குறிக்கும். } பெருவிரல் நுனியையும்

சேர்த்து ஒன்றுபடுத்திக் காட்டுவதால் முறையே சீவனின் கற்பனு பாகம் நீங்கிய சச்சிதானந்த சொரூப ஆன்மாவும், ஈசனின் கற்பனு பாகம் நீங்கிய சச்சிதானந்த சொரூபப் பிரம்மமும் ஏகமே (ஒன்றே) யாம். ஆகவே தத்துவம் அசி = அது நீயாக இருக்கிறாய்; அதாவது சச்சிதானந்தப் பிரம்மமாகிய அது சச்சிதானந்த ஆன்மாவாகிய நீயாக இருக்கிறாய். இவ்வாறு அறிந்து முக்தியாகிய பேரின்ப வீடு அடைவாயாக என அறிவிப்பதாம்.

மேற்கூறிய சிந்முத்திரைப் பொருளையறிவிக்கும் அறிவுரைகள்.

சிவஞான வள்ளலார் சாத்திரம் உபதேசமாலை.
ஸ்ரீ தக்ஷிணாமூர்த்தி வணக்கம்.

சீவ பரமிரண்டும் தேருமிடத்(து) ஏக(ம்) என்று
மேவியசின் முத்திரைகொள் மென்கரத்தால்—ஓவில்
வழக்கறுத்தான் பல்சமய வாதிகளே காண்மின்
மழுக்கரத்தில் ஏந்தியஎம் மான்.

ஷை சாத்திரத்தில் ஞான விளக்கம்.

சத்தும் அசத்தும் சதசத்தும் நீயல்ல
சுத்தசிவம் நீயென்று சொல்லினன்—மொய்த்தெழுந்த
கல்லாலின் கீழிருந்து காணகதி நால்வர்க்கும்
சொல்லாமல் சொன்ன துரை.

சத்தும் அசத்தும் சதசத்தும் முன்காட்டிச்
சத்தும் அசத்தும் சமமாக்கிச்—சத்தசத்தும்
இல்லா இடத்தில் எனதொழிவைக் காட்டிற்று
கல்லாலின் கீழிருந்த கை.

**ஷை சாத்திரத்தில் பதி பசு பாசவிளக்கம்; மகாவாக்கிய இலக்கணம்:—**

நாலு வேதமும் தத்துவ மசியெனல் நவிலும்
சால நீர்தெளிந் துறுதிகொள் வீரெனச் சாத்திப்
பால லோசனன் மவுனமுற் றிருந்தனன் பருவக்
கோல நால்வரும் நிட்டையைக் கூடினர் அன்றே.

## திருஷ்டாந்தம் - சித்திர விளக்கம்.

படிகமலையில் நாய் தன்னுடைய பல நிழல்களைக்கண்டு அவற்றை, தான்என அறியாத அறியாமையினால், தனக்கு வேறான பல வேறு நாய்கள் என நினைத்து, விருப்பு வெறுப்பு அடைந்து குலைத்துத் துன்புறுதல்.



**ஷ சாத்திர ஞான விளக்கத்தில் ஈசுர பத்தி.**

ஈசன்வே(று) யான்வே(று) என்(று) எண்ணும் கடையினங்கள்
ஈச(ன்)அடி என்னும் இடையினங்கள்—ஈசனே
ஆனேம் என்(று) ஏமாக்கும் ஆயில் தலையினங்கள்
ஆறுத மாறு அறி.

**ஸ்ரீ தாயுமானவர் பாடல் — நின்றநிலை.**

இருக்காதி மறைமுடிவும் சிவாக மாதி
இதயமும்கை காட்டெனவே இதயத் துள்ளே
ஒருக்காலே உணர்ந்தவர்கட்(கு) எக்கா லுந்தான்
ஒழியாத இன்பவெள்ளம் உலவா நிற்கும்.

கற்றதும்கேட் டதும்தானே ஏதுக் காகக்
கடபடர்என்(று) உருட்டுதற்கோ கல்லால் எம்மான்
குற்றமறக் கைகாட்டும் கருத்தைக் கண்டு
குணம்குறியற்(று) இன்பநிட்டை கூட அன்றே.

---

[மேற் கூறிய வேத சாஸ்திரங்கள் அறிவிக்கின்ற அஞ்ஞான திருஷ்டியின் கற்பனைத் தோற்றத்தைத் திருஷ்டாந்தத்துடன் கூறுதல் வாயிலாக, ஞான திருஷ்டியின் உண்மைத் தோற்றத்தை ஞானிகள் காணும் முறையை, விஞ்ஞான சாரம் என்னும் நூலில் ஸ்ரீ குமார தேவ சுவாமிகள் கூறுவது, இங்கு (60 ஆம் பக்கம்) அமைத்துள்ள திருஷ்டாந்த சித்திர விளக்கத்துடன் கூறப்படுகிறது.]

**விஞ்ஞான சாரம் - ஸ்ரீ குமாரதேவ சுவாமிகள் அருளியது.**

அடியும் முடியும் நடுவுமிலா அகண்ட ஒளியாம் ஒருதனையே
கடிய நினைவாம் மாயையினுல் கலங்கி வேருய் அனேகமாய்ப்
படிக மலையில் சுணங்கனைப்போல் பார்த்தல்எனவே அதிட்டான
முடிவில் தன்னைத் தான்கண்டே மோகம் இன்றிப் பார்த்திருப்பர்.

(இதன் பொருள்) திருஷ்டாந்தம் (உவமானம்):— நாய் படிக மலையை அடைந்தபோது, அந்தப் படிகமலையில் தோற்றும் தன்னுடைய சாயை (நிழல்)களைக் கண்டு அவைகள் தன்தோற்றமே என்று அறியாத அஞ்ஞான திருஷ்டியினுல் கலக்கமடைந்து, ஒன்றுன தன்னையே, தனக்கு வேருன அநேக (பல) வேறுபாடுடைய நாய்கள் எனக் கற்பனை செய்து கண்டு, விருப்பு வெறுப்புற்றுக் குலைத்து அந்தப் படிக மலையில் மோதித் துன்புறுதல் போல—தாஷ்டாந்தம் (உவமேயம்):— கொடிய நினைவாகிய மாயா (அஞ்ஞான) திருஷ்டியினுல் கலக்கமடைந்து, ஆதியும் அந்தமும் மத்தியும் (கீழும் மேலும் நடுவும்) இல்லாத அகண்ட அறிவொளியாம் (சித்துப் பிரகாசமாம்) ஒன்றுன (ஏகமான) ஆத்மப் பிரம்மமாகிய தன்னையே, தனக்கு வேருன அநேக (பல) வேறுபாடுடைய உலகப் பொருள்கள் எனக்




## வேதாந்த - அர்த்த சித்திர விளக்கம்

திருஷ்டாந்தம்
ஒரு நேர் மனிதன் அலை
யும் தண்ணீரில் அலை
யும் தலைகீழான தன்
நிழல்கள் பல தோன்று
தலைத் தன் உரு
வமே என அறிதல்.



கற்பனை செய்து கண்டு, விருப்பு வெறுப்புற்றுப் பொருந்தித் துன்புறுதல் ஆம்—என ஞானிகள் ஞானதிருஷ்டி (பார்வை)யினால் அறிந்து, அநேகமாகத் தோற்றும் உலகப் பொருள்கள் எல்லாம் அவற்றிற்கு அதிஷ்டானமான (ஆதாரமான) ஆத்மப் பிரம்மமாகிய தானேயாகும் (சர்வம்பிரம்மம்) என்னும் நிச்சயமாகிய முடிவில், ஆத்மப்பிரம்மமாகிய தன்னைத்தான் கண்டு (அறிந்து'), மோகமின்றி அதாவது துக்க காரணமாகிய அஞ்ஞான திருஷ்டி (பார்வை) யின்றித் தானாகிய ஆத்மப் பிரம்ம ஆனந்த சொரூபத்தையே பார்த்து அனுபவித்துக் கொண்டிருப்பார்கள். (என்றவாறு)

[மேற்கூறிய வேத சாஸ்திரங்கள் அறிவிக்கின்ற அஞ்ஞான திருஷ்டியின் கற்பனைத் தோற்றமாகிய (சோபாதிகப் பிராந்தித் தோற்றமாகிய) விபரீதத் தோற்றத்தை நீக்குவது எப்படி? என்னும் வினாவுக்கு, விடையாகத் திருஷ்டாந்தம் கூறுதல் வாயிலாக விபரீதத் தோற்றம் நீங்கும் உபாயம், கைவல்லிய நவநீதம் என்னும் நூலில் ஸ்ரீ தாண்டவராய சுவாமிகள் கூறுவது, இங்கு (62 ஆம் பக்கம்) அமைத்துள்ள திருஷ்டாந்த சித்திர விளக்கத்துடன் கூறப்படுகிறது.]

கைவல்லிய நவநீதம்-ஸ்ரீ தாண்டவராய சுவாமிகள் அருளியது.

ஸ்ரீ பொன்னம்பல சுவாமிகள் உரை.

(விளக்கத்துடன் கூறப்படுகிறது.)

[அவதாரிகை (முன்னுரை):— சுத்தியில் ஆரோபிதமான (கற்பிதமான) வெள்ளி சுத்தி ஞானத்தால் நிவிர்த்தியாவது போல, மாயாமயமான சகத்தும் அதிஷ்டான ஞானத்தால் நிவிர்த்தியாகாமல் பூருவம் போலவே தோற்றுவதால், அஃதெவ்வாறு நிவிர்த்தியாம் என்று ஆட்சேபித்துச் சுத்தி வெள்ளி நிருபாதிகப் பிராந்தியாகலின், அது அங்ஙனமாம்; சகத்துச் சோபாதிகப் பிராந்தியாகலின், இதில் மித்தியாத்துவ புத்தியுளதாதலே நிவிர்த்தி யானதாமென்று திருஷ்டாந்த முகத்தாற் கூறுகின்றார்.]

பூரிக் கும்கன சச்சிதா நந்தத்தில்
　　பொய்சடம் துயர்மூன்றும்
தூரத்(த) ஆயினும் தோன்றுபாழ் விபரிதம்
　　துடைப்ப(து)எப் படிஎன்றால்
நீரில் தோன்றும்தன் நிழல்தலை கீழ(து)ஆய்
　　நின்(று)அலை யினும்நேராய்ப்
பாரில் தோன்றிய தன்னைநோக் கிடி(ல்)அந்தப்
　　பாழ்நிழல் பொய்ஆமே.

(இதன் பொருள்) (வினா)(பொன்னானது பூஷணத்தை(நகையை) நிறைத்து நிற்பதுபோலச் சர்வத்தையும்) நிறைத்துநிற்கும், பரிபூரணமாகிய சச்சிதானந்த ரூபப் பிரஹ்மத்தில்; அசத்துச் சடதுக்க

வடிவமான மாயாம்சம் மூன்றும் (நீரிலே புழுதியும், நெருப்பிலே தண்ணீரும் இல்லாதது போலச்) சேய்மைத்த வாயினும் (இல்லாத தாயினும்). தோற்றுகின்ற இன்மைரூபமான விபரீதத்தை (த்தோற்ரு மல்) நாசமாக்குவது எவ்வித உபாயத்தால் என்று நீ ஆட்சேபித் தால் (கேட்டால்) ?—

(விடை) (திருஷ்டாந்தம்=உவமானம்) தடாக (குளத்துச்) சலத் தில் தோற்றும் தன்னுடைய சாயை (நிழல்) ஆனது அதோமுகமாய் (தலைகீழாய்) நின்று சலிப்பினும் (அலையினும்), ஊர்த்தமுகமாய் (நேர்முகமாய்) (குளக்)கரையில் நின்று விளங்கிய தன்னை நாடிடில் (நோக்கிடில், அந்த இன்மையான அதோமுகச்சாயை (தலைகீழ் நிழல்) மித்தை (பொய்) ஆம். (அதுபோல-என்றவாறு)

(தாஷ்டாந்தம் = உவமேயம்) காரண ஞானத்தால் (அதாவது விவர்த்த உபாதான காரணமாகிய அதிஷ்டான (ஆதார) சச்சி தானந்த ரூபப் பிரஹ்ம ஞானமாகிய உபாயத்தால்) காரியம் மித்தை என்னும் ஞானமுளதாம் (அதாவது விவர்த்த வடிவ காரியமாகிய அசத்துச்சடதுக்க வடிவமான மாயையின் அம்சங்கள் மூன்றும் தோற்றுகின்றதாகிய விபரீதமானது (திரிபு ஆனது) மித்தை (பொய்) என்னும் ஞானமுளதாய் நாசமாவதாம்).

இவ்வாறு உளதாகும் ஞானத்தையே அத்வைத வாதத்தில் புருஷார்த்தம் அதாவது புருஷர்களாகிய அறிஞர்களால் விரும்பப் படுவது என்று ஒப்பினர்; என்பது எஞ்சி நின்றது.

தடாக (குளத்துச்) சலத்தில் அதோமுகமாக (தலைகீழாக)ச் சாயை (நிழல்) தோற்றினும், வாஸ்தவமாக (உண்மையாக)ப் புருஷன் அப்படிக்கு இல்லாதது போலச் சச்சிதானந்தப் பிரஹ்மத் தில் அசத்துச் சடதுக்க ரூபமான சகத்துத் தோற்றினும் வாஸ்தவ மாக (உண்மையாக) இல்லை. எப்புருஷனுக்கும் அதோமுகப் புருஷச் சாயையினிடத்து அது சத்திய மென்னும் அபிமானம் யாதொரு தேசத்திலும், யாதொரு காலத்திலும் காணப்படவில்லை. அப்படிச் சோபாதிகப் பிராந்தி ஸ்தலத்தில் (உபாதியோடு கூடிய அஞ்ஞானத்தால் தோற்றும் அத்தியாசமாகிய கற்பனையிடத்தில்) சத்திய புத்தியின் நாசமே ஞானத்தால் உளதாகும் நிவிர்த்தி எனக் கொள்ளற் பாலதாம்; என்பது தாற்பரியம்.

**குருஸ்துதியும் வேதாந்த அர்த்தமும்**
**மூலமும் உரையும் முற்றின.**

## பிழை திருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 8 | 24 | 34ம் | 34ஆம் |
| 12 | 18 | அனு விப்பான் | அனுபவிப்பான் |
| 13 | 2 | விபரங்கன் | விபரங்கள் |
| 18 | 31 | தியாய் | தியாய்) |
| 22 | 16 | எமது | எம(து) |
| 32 | 17 | தயங்கு | தங்கு |
| 43 | 30 | (சம்ஸ்காரத்தை | (சம்ஸ்காரத்தை) |
| 50 | 13 | வசதி ான | வசதியான |
| 53 | 6 | " பித்யதே | " பித்யதே " |
| 63 | 6 | (அறிந்து | (அறிந்து) |

